சுகமான, சுபிட்சமான நிம்மதியான
வாழ்வுக்கு நிரந்தர வழிகாட்டி

# நீதி சாஸ்திரம்

அன்றாட வாழ்க்கையில்
அனைவரும் கடைப்பிடிக்க
வேண்டிய அற்புதமான
நெறிமுறைகள்



ஸ.நாகசாமி



# நீதி சாஸ்திரம்

(அன்றாட வாழ்வில்
அனைவரும் கடைப்பிடிக்க வேண்டிய
500-க்கும் மேற்பட்ட அற்புதமான நெறிமுறைகள்)

S. நாகசாமி




அருள்மிகு அம்மன் பதிப்பகம்
மிகச் சிறந்த நூல்கள் வெளியிடுவோர்
8, கங்கையம்மன் கோயில் தெரு
(ராயப்பேட்டை நெடுஞ்சாலை
அஜந்தா ஹோட்டல் எதிர்ப்புறம்)
இராயப்பேட்டை: சென்னை - 600 014.

# நூல் விவரப்பட்டியல்


| | |
|---|---|
| ☐ நூலின் பெயர் | : நீதி சாஸ்திரம் |
| ☐ பொருள் | : வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டிய நீதிகளின் தொகுப்பு |
| ☐ ஆசிரியர் பெயர் | : S. நாகசாமி |
| ☐ உரிமை | : பதிப்பகத்திற்கு |
| ☐ முதற் பதிப்பு | : டிசம்பர் 1990 |
| ☐ இரண்டாம் பதிப்பு | : அக்டோபர் 1991 |
| ☐ மூன்றாம் பதிப்பு | : ஜூலை 1992 |
| ☐ நான்காம் பதிப்பு | : ஜூன் 1993 |
| ☐ ஐந்தாம் பதிப்பு | : செப்டம்பர் 1995 |
| ☐ ஆறாம் பதிப்பு | : டிசம்பர் 1996 |
| ☐ ஏழாம் பதிப்பு | : ஜனவரி 1998 |
| எட்டாம் பதிப்பு | :பிப்ரவரி 2000 |

☐ விலை ரூ.17.00

(ரூபாய் பதினேழு மட்டும்)

| | |
|---|---|
| ☐ மொத்த பக்கங்கள் | : 88 |
| ☐ நூலின் அளவு | : 18 x 12.5 செ.மீ. கிரவுன் |
| ☐ தாளின் தரம் | : 10.5 kg வெள்ளைத்தாள் |
| ☐ மொழி | : தமிழ் |
| ☐ எழுத்து | : 12 point |
| ☐ நூல் கட்டுமானம் | : செக்ஷன் தையல் 13 kg Wrapper Board |
| ☐ அட்டைப்படம் | : N. ஜமால் |
| ☐ அச்சிட்டோர் | : ரவிராஜா ஆப்செட், சென்னை-14 |

# "தர்ம சாஸ்திரம்"

புராண புருஷர்கள்தான் நமக்கு வழிகாட்டிகள் (Ideal) என்று தெரிகிறது. அவர்களுடைய கதைகளைப் படித்தால் அவர்களுடை யது மாதிரியான உயர்ந்த குணங்களைப் பெற வேண்டுமென்ற ஆசை உண்டாகிறது. ஆனாலும் ஆசை உண்டாகிறதே தவிர, அந்த உத்தம குணங்களைச் சம்பாதித்துக் கொண்டு, எந்த சந்தர்ப்பத்திலும் அவற்றிலிருந்து நழுவாமல் இருப்பதென்றால், இது அஸாத்தியமாக இருக்கிறது.



பகவானும் கீதையில், "மநுஷ்ய னானவன் ஒரு நொடியும் சும்மா இல்லாமல் காரியம் பண்ணிக் கொண் டேயிருக்கும்படியாகத்தான் ப்ரகிருதி (இயற்கை) அவனை ஏவிக் கொண்டி ருக்கிறது. அதனால் அவன் இந்தக் காரியங்களைப் பண்ணுகிற சரியான வழியைத் தெரிந்து கொண்டு அப்ப டியே பண்ணி அதனால் சித்தத்தை சுத்தி செய்து கொண்டு உத்தம குணங் களை சம்பாதித்துக் கொண்டு, அப்பு றம் குணங்களைக் கடந்து குணாதீதனாக, ஞானியாக, பிரம்மவித் தாக ஆகவேண்டும்" என்று சொல்லியிருக்கிறார்.

பொதுவாக நாம் இப்போதிருக்கிற நிலைமையில் ஏதோ ராமாயணம், பாகவதம், புராணம், கொஞ்சம் தெரிகிறது. இதில் கதாபாத்திரங்கள் இன்னின்ன மத அநுஷ்டானங்களைச் செய்ததாக அங்கங்கே வருகிறது. ஆனால் அங்கங்கே வருகிறதே யொழிய, ஒரே இடத்தில் ஒரே சீராகக் கர்மாக்களை அமைத்துக் கொடுக்க வில்லை. புராண இதிகாசங்கள் பக்தியைப் பிரதானமாகச் சொல்கின் றன. ஆனால் நாம் தினமும் அறுபது நாழியும் பக்தி பண்ணிக் கொண்டு, ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டு இருக்க முடியுமா? முடியாதே!

குடும்பத்திற்காக நாம் அநேக காரியங்கள் செய்ய வேண்டும். குளிப்பது, சாப்பிடுவது போன்றதைச் செய்ய வேண்டும். இதுவன்றி வேறு ஸத்கர்மாக்கள் நமக்கு வேண்டும். அவற்றை எங்கேயிருந்து தெரிந்து கொள்வது. புராண புருஷர்கள் நமக்கு லக்ஷியத்தைக் காட்டுகிறார்கள். அந்த லக்ஷியத்தை அடைவதற்கு வழி என்ன என்றால் கர்மானுஷ்டானத்தில்தான் ஆரம்பிக்க வேண்டும்.

இப்படி நாம் நடைமுறையில் (Practical) ஆகச் செய்ய வேண்டியதை எல்லாம் சொல்வது 'தர்ம சாஸ்திரம்'. நாம் என்னென்ன செய்ய வேண்டும் என்று வேதத்தில் அங்கங்கே உதிரியாகச் சொல்லியிருக்கின்றனவோ அவற்றை நன்றாக வகைப்படுத்தி விவரமாகச் சொல்கிற வேத உபாஸ்யம் இது. இப்படிப் படுத்துக் கொண்டால் சிரெயஸ், இப்படி ட்ரெஸ் பண்ணிக் கொண்டால் அது ஆத்மாவுக்கு நல்லது, இப்படி வீடு கட்டினால்தான் அநுஷ்டானத்திற்குச் சாதகமாக இருக்கும் என்பதாக வாழ்க்கையில் எல்லா விஷயங்களையும் மதத்தோடு அது சம்பந்தப்படுத்தி விடுகிறது.

மனு, பராசரர், யாக்ஞவல்கியர், கௌதமர், ஹாரீதர், யமன், விஷ்ணு, சங்கர், லிகிதர், பிருஹஸ்பதி, தக்ஷன், அங்கிரஸ், பிரதேசர், ஸம்வர்த்தர், அசனஸ், அத்ரி, ஆபஸ்தம்பர், சாதாபர் என்றிப்படி பதினெட்டு மஹரிஷிகள் தங்களுடைய அதிமானுஷ்ய சக்தியால் வேதங்களை முழுக்கத் தெரிந்து கொண்டு அதிலிருந்து தொகுத்து தர்ம சாஸ்திரங்களைத் தந்திருக்கிறார்கள். இவை மநுஸ்மிருதி, பராசர ஸ்மிருதி, யாக்ஞவல்கிய ஸ்மிருதி என்று அவரவர் பெயரால் வழங்குகின்றன. இவற்றைப் பார்த்தால் போதும், வாழ்க்கையில் செய்ய வேண்டிய ஸகல அனுஷ்டானங்களையும், தர்மங்களையும் தெரிந்து கொண்டு விடலாம்.

பதினெட்டு ஸ்மிருதிகளைத் தவிர, உபஸ்மிருதிகள் என்று 18 துணை நூல்கள் உள்ளன. ஸ்ரீமத் பகவத் கீதையையும் ஸ்மிருதியோடு சேர்த்துச் சொல்கிற வழக்கம் உண்டு.

—ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

# நீதி சாஸ்திரம்

1. சூரியோதயத்திற்கு முன்னால் அதிகாலையில் எழுந்திருக்க வேண்டும். காலைக் கடன்களை முடித்து குளிர்ந்த நீரில் குளிக்க வேண்டும். தூய வஸ்திரங்களை அணிய வேண்டும். பிறகு கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும்.

2. காலையிலும், மாலையிலும், இரவிலும் கடவு ளைத் துதிக்க வேண்டும். தினசரி கோயிலுக்குப் போக வேண்டும். முடியாதவர்கள் வாரம் ஒரு முறை அல்லது மாதம் ஒரு முறை போக வேண்டும். பிரார்த்தனைக்குச் சிறந்த இடம் கோவில்தான்.

3. கோவிலில் நிதானமாக நடந்து ஒவ்வொரு விக்கிர கத்தையும் வணங்க வேண்டும். வீண் பேச்சு, அரட்டை கூடாது, கோவிலில் மத சம்பந்தமான பேச்சையே பேச வேண்டும். அசுத்தம் செய்யக் கூடாது. அமைதியாக பிரார்த்தித்தால் அமைதி கிடைக்கும்.

4. வாழ்க்கைக்கு மிகத் தேவையானது பணம்தான். அதை நல்ல வழியில் சம்பாதிக்க வேண்டும். உழைத்து சம்பாதிக்க வேண்டும். பிறரை ஏமாற்றிப் பெறும் பணம் நிலைக்காது.

5. ஒரு மனிதனுக்கு உண்மைதான் தாய். அறிவுதான் தகப்பன். தர்மம்தான் கூடப் பிறந்தவன். தயவுதான் நண்பன். அடக்கம்தான் மனைவி. பொறுமைதான் மகன். இவர்களே உறவினர்கள்.

6. நண்பனை அவன் இல்லாதபோது மனம் நிறைந்து புகழவேண்டும். ஆசிரியரை எந்த இடத்திலும் புகழவேண்டும். மனைவியைக் கூடி வாழும் நேரத்தில் புகழவேண்டும். புதல்வர்களை மனதில் வைத்து புகழ வேண்டும். தொழிலாளியை வேலை முடிந்த பின்னர் புகழவேண்டும்.

7. நல்லது அநேகமாக உண்மையாகயிருப்பதில்லை. உண்மை சில சமயம் அழகாகயிருப்பதில்லை. அழகு பெரும்பாலும் நல்லதாகயிருப்பதில்லை.

8. நாற்சந்தியிலும், மேடை கட்டி பூஜிக்கிற மரத்தின் கீழும், சுடுகாட்டின் சமீபத்தில் உள்ள தோட்டங்களி லும், துஷ்ட ஸ்திரிகளின் அருகிலும் ராத்திரி வேளையில் அடியோடு தங்கலாகாது.

9. பெரியோர், பிராமணர், தேவதைகள் இவர்களின் நிழலைத் தாண்டலாகாது.

10. ஜனசஞ்சாரம் இல்லாத காட்டுக்குள் ஒருவனாகப் போகலாகாது. வெகு நாளாக குடியில்லாத வீட்டில் தனியாக இருக்கலாகாது.

11. துஷ்ட யானைகள், பாம்புகள் இவற்றின் சமீபம் செல்லலாகாது. யானையின் எதிரிலும், பாம்புகளின் அருகிலும் அதிக நேரம் நிற்கலாகாது.

12. நிறைய பற்கள், கொம்புகள் உள்ள மிருகங்கள் அருகில் செல்லலாகாது.

13. நல்ல பனியில் நிற்கக் கூடாது. எதிர் காற்றிலோ, எதிர் வெய்யிலிலோ போகக்கூடாது.

14. வஸ்திரம் இல்லாமல் குளிக்கவோ தூங்கவோ கூடாது.

15. அதிகமாக விழித்துக் கொண்டும், தூங்கிக் கொண்டும் இருக்கக் கூடாது.

16. ஒரே இடத்தில் ஒரே ஆசனத்தில் அதிக நேரம் உட்கார்ந்திருக்கக் கூடாது.

17. அயோக்கியன் என்று தெரிந்து விட்டால் அவனை அண்டக்கூடாது.

18. கெட்டஸ்வபாவத்தை வைத்துக் கொள்ளக் கூடாது.

19. எப்போதும் படுத்துக் கொண்டிருப்பதும் பலம் உண்டாவதற்காக அதிக தேகப் பயிற்சி செய்வதும் கூடாது.

20. கேசம், எலும்புகள், முட்கள் நிறைந்த இடம்; மலமூத்திராதியினால் அசுத்தமான பூமி, பலி வைத்திருக்கும் இடம், சாம்பலோ உமியோ கொட்டியிருக்கும் இடம், ஸ்நானம் செய்து நனைந்திருக்கும் பூமி இவற்றைத் தாண்டவோ, மிதிக்கவோ கூடாது.

21. தன்னுடைய வருமான்ம், வியாதி, கடன் இவற்றை யாரிடமும் சொல்லக்கூடாது.

22. பகலில் பக்கம் பார்த்துப் பேசவேண்டும். இரவில் எதுவுமே பேசக்கூடாது.

23. பையில் இருக்கும் பணம், பக்கத்தில் இருக்கும் மனைவி, வளர்க்கும் நாய் இவற்றை மட்டும் நம்ப வேண்டும்.

24. குறைவாகப் பேச வேண்டும். இனிமையாக பேசவேண்டும். உண்மையே பேசவேண்டும்.

25. புத்திசாலியின் முதல் நண்பன் பணம்.

26. கடன் இல்லாதவனே பணக்காரன், உடல் ஆரோக்கியம் உள்ளவனே செல்வந்தன்.

27. மன நிறைவு என்பது இயற்கையாகவே நம்மிடம் உள்ள செல்வம். ஆடம்பரம் என்பது நாமே தேடிக்கொள்ளும் வறுமை. எளிமை வாழ்வுக்குத் துணை புரியும்.

28. வாழ்க்கை என்பது மல்யுத்தம் போன்றது. நாட்டியம் போன்றது அல்ல. முதலில் உறுதியாக யிருக்கவேண்டும். பிறகு எதிர்பாராத தாக்குதலை எதிர்பார்த்துத் தயாராகயிருக்க வேண்டும்.

29. தர்மம் சத்தியத்தால் காக்கப்படுகிறது. கல்வி தீவிரமான பயிற்சியால் காக்கப்படுகிறது. அழகு சுத்தம் செய்வதால் காக்கப்படுகிறது. குலப்பெருமை நல்ல நன்னடத்தையால் காக்கப்படுகிறது.

30. சத்ரு யார்? சோம்பேறித்தனம். சூரன் யார்? அதர்மத்தை வென்றவன். கொடிய விஷம் எது? பெரியோர்களை அலட்சியம் செய்யும் மனப் போக்கு.

31. பரிசுத்தமானவன் யார்? விவேகம் உள்ளவன். சிறந்த நன்மை அளிப்பது எது? தர்மம். வாழ்க்கைக்கு துணை யார்? மனைவி. வழிப்பயணத்திற்கு துணை யார்? கல்வி.

32. மனிதனுக்குத் தேவை அன்புள்ள இதயமும் அமைதியுள்ள மூளையும்.

33. சந்தர்ப்பம் வரும்போது அதனைப் பயன்படுத்திக் கொள்ள தயாராகயிருப்பதே வெற்றிக்கு அடிப்படை.

34. கடன் கொடுப்பதை விட தானம் கொடுப்பதே மேல்.

35. பணத்தை விட அறிவே உயர்ந்தது. அறிவைவிட ஒழுக்கமே சிறந்தது.

36. மனச்சாட்சி நீதிபதியாகயிருந்து தண்டனை தரு முன், நண்பனாகயிருந்து எச்சரிக்கை செய்யும்.

37. எல்லா மனிதர்களையும் நம்பி விடுவது ஆபத்து. ஒருவரையும் நம்பாமல் இருப்பதும் பேராபத்து.

38. மனதில் களங்கம் இல்லாவிட்டால் துன்பம் இல்லை.

39. வாழ்க்கையில் முன்னேற வேண்டுமானால் உன் னுடைய கால்களால் நடந்துபோ. ஏனையோரின் முது கின்மேல் ஏறிப்போக விரும்பாதே. அது உனக்கு ஆபத்து.

40. உழைப்பு உயர்வைத் தரும். நல்ல எண்ணம் நன்மையைத் தரும். ஒழுக்கம் பெருமையைத் தரும்.

41. சிலரிடம் உன் துன்பத்தைச் சொல்லாதே. அவர் கள் தரும் ஆறுதலைவிட அவர்கள் அடையும் ஆனந் தமே அதிகம்.

42. வேலிகள் நன்றாக யிருந்தால்தான் அண்டை வீட்டுக்காரர்கள் ஒழுங்காக யிருப்பார்கள்.

43. ஆசைகள் குறைய அமைதி பெருகும். கர்வம் முன்னால் போனால் அவமானம் பின்னால் போகும்.

44. இளமையில் துணிச்சல் - முதுமையில் நிதானம். வாழ்வதில்தான் இன்பம். உழைப்பதில்தான் வாழ்வு.

45. சோம்பலின் விளைவு தரித்திரம், முயற்சியின் விளைவு மூலதனம்.

46. கோபத்தோடு எழுந்தால் நஷ்டத்தோடு உட்கார வேண்டும். கோபத்தால் போனது சிரித்தால் வராது.

47. ஆற்றல் உள்ளவனுக்கு அடக்கம் தேவை. உயர்ந் தவருக்கு பணிவு ஒரு அணிகலன்.

48. கழுதையைக் கட்டி தீனி போட்டாலும் போட லாம். ஆனால் கயவனைக் கட்டி தீனி போடக்கூடாது.

49. சுயநலக்காரனுக்கு சொந்தக்காரர்களே இருக்க் மாட்டார்கள்.

50. தன்னையே பெருமையாக நினைப்பவன் தன் னையே ஏமாற்றிக் கொள்கிறான்.

51. நல்லது எதையும் இன்றே செய். நாளை என்று ஒத்திப் போடாதே.

52. ஒருவர் செய்த உதவிகளை மறக்கக் கூடாது. தீமைகளை அன்றே மறந்து விட வேண்டும்.

53. பிறர்க்கு துன்பம் தராமலிருப்பதே தவம். சபலம் உடையவனுக்கு சாந்தி கிடைப்பதில்லை.

54. தீயோருடன் இருப்பதைவிட தனிமையில் இருப் பது நல்லது. தீயதைப் பேசுவதை விட மௌனமே சிறந்தது.

55. ஒழுக்கம் தவறாதவர்கள் நற்குடியிருப்பு, நீண்ட வாழ்நாள், அழகு, பொருட்செல்வம், பூமி, ஆரோக்கியம், கல்வி ஆகியவற்றை நிரம்பப் பெறுவர்.

56. ஆசிரியர்க்கு தக்ஷிணை கொடுத்தல், யாகம் செய்தல், தவம் செய்தல், கல்வி கற்றல் முதலியவற்றைக் கால தாமதமின்றி செய்து முடிக்க வேண்டும்.

57. பசு, பிராமணன், தீ; உச்சந்தலை ஆகியவற்றை எச்சிலுடன் தீண்டக்கூடாது.

58. சூரியன், சந்திரன், எரிநட்சத்திரம் இவைகளை எச்சிலுடன் காணக்கூடாது.

59. காலையும் மாலையும் கடவுளை வணங்க வேண்டும். தண்ணீரில் நிழல் பார்க்கக்கூடாது. நிலத்தைக் கீறக்கூடாது.

60. தினசரி நீராட வேண்டும். நீரில் உமிழக் கூடாது. நீரில் விளையாடக்கூடாது.

61. விருந்தினர், முதியவர், குழந்தைகள் இவர்களுக்கு உண்ணக் கொடாமல் தான் மட்டும் உண்ணக்கூடாது. முதியோர், உடல்நலம் அற்றோர், சிறுவர் முதலில் உண்ணவேண்டும். கிழக்கு, மேற்கு திசையை நோக்கி உட்கார்ந்து உண்ண வேண்டும்.

62. உத்தரத்திற்கு நேராக கட்டிலிட்டு படுக்கக் கூடாது. படுத்தோ, நின்றோ உண்ணக்கூடாது. கட்டிலின் மேலிருந்தும் தின்னக்கூடாது.

63. பெரியோர்கள் உண்ணும்போது அவர்களுக்கு முன் உண்ணுதலும் எழுந்திருப்பதும் கூடாது.

64. தண்ணீரை இரு கையாலும் குடிக்கக் கூடாது. இரு கையாலும் சொறியக்கூடாது.

65. பெரியோரிடம் ஒன்றைக் கொடுக்கும் போதும், வாங்கும்போதும் இரு கையாலும் வாங்கல், கொடுத்தல் செய்ய வேண்டும்.

66. படுக்கும் போது கடவுளைத் தொழ வேண்டும். வடக்கு திசையில் தலை வைத்துப் படுக்கக் கூடாது.

67. பிறர் மனை புகுதல், கள் உண்ணல், களவு செய்தல், கொலை, சூதாடல் இவைகளை மனதில் கனவில்கூட நினைக்கக்கூடாது.

68. போர்க்களம், கள் குடிக்கும் இடம், பரத்தையர் சேரி - இங்கு தங்கக்கூடாது.

69. மாலையில் படுத்துத் தூங்கல், வழி நடத்தல், சாப்பிடுவது கூடாது. யாரையும் கோபிக்கக் கூடாது. மாலையில் விளக்கு ஏற்ற வேண்டும்.

70. ஆபத்துக்கு உதவாத பிள்ளை, பசிக்கு உதவாத அன்னம், தாகத்தை தீர்க்காத தண்ணீர், வறுமை தெரியா மல் அதிகம் செலவு செய்யும் மனைவி, ஆசிரியர் உபதேசம் கேளாத மாணவன், பாவங்களைத் தீர்க்காத தீர்த்தங்கள் - இவை பயன் இல்லாதவை.

71. எப்போதும் நம் பலத்தையும் அறிவு ஆற்றலை யும் நம்பிச் செயல்பட வேண்டும்.

72. எளியவர் என்று எவரையும் இகழக் கூடாது. தகுதியற்றவர்களிடமிருந்து எதையும் வாங்கக் கூடாது.

73. இனிமையாகப் பேசுவதால் நட்பு உண்டாகும். வன்சொல் பேசுவதால் பகை உண்டாகும்.

74. அன்புடையவர் வாயினில் கடும் சொல் தோன்றாது. கற்று அறிந்தவர் வாயினில் வஞ்சனை சொல் தோன்றாது. அறிவுள்ளவர் வாயில் தீய சொல் தோன்றாது. கீழ்மக்கள் வாயில் யாவும் தோன்றும்.

75. இளமையில் கல்லாத செயல் தீமை தரும். வருவாய் இல்லாதபோது தர்மம் செய்வது தீமை தரும். சுற்றத்தார் இல்லாதபோது சினமடைதல் தீமை தரும்.

76. அன்பு இல்லாதவர் இல்லத்தில் உண்பது தீமை தரும்.

77. பிறர் பொருளைத் திருடக் கூடாது. கிழ் மக்களுடன் சேரக்கூடாது. எப்போதும் எவரையும் பகைக்கக் கூடாது.

78. நெருங்கி வாழும் மக்களுக்கு நன்மை செய்து வாழ்த்த வேண்டும். ஒட்டாத மக்களை காலமறிந்து விலக்க வேண்டும். எவரிடமும் சென்று உண்பதைக் குறைக்க வேண்டும். ஏழைகளிடம் காட்டும் கோபத்தை விடவேண்டும்.

79. சோம்பேறிகளுக்கு இடையில் சுருசுருப்பாகயிருப்பவரும், பொய்யர்களுக்கு இடையில் உண்மை பேசுபவரும், அயோக்யர்களுக்கு இடையில் வாழும் நல்லவர்களும் துன்பம் அடைவார்கள்.

80. எல்லா உண்மைகளையும் எப்போதும் சொல்லக் கூடாது.

81. தேவையில்லாததை வாங்கக் கூடாது. அவசியம் இல்லாததைப் பேசக் கூடாது. அழையாத வீட்டிற்குப் போகக் கூடாது.

82. செல்வம் வரும், போகும். நிலையில்லாதது. ஆனால் கல்வி என்றும் நிலைத்து நிற்கும்.

83. பிறர் அன்புக்கு உரியவராக இருப்பதைவிட நம்பிக்கைக்கு உரியவராக யிருப்பது சிறந்தது.

84. குழந்தைகளை நாணயமானவர்களாக ஆக்குவது தான் நாம் அவர்களுக்குத் தரும் ஆரம்பக் கல்வியாகும்.

85. கங்கைநதி பாவத்தைப் போக்கும். மதிநிலா உஷ்ணத்தைப் போக்கும். கற்பக மரம் வறுமையைப் போக்கும். ஆனால் சாதுக்களின் சேர்க்கை பாபம், தாபம், வறுமை மூன்றையும் போக்கும்.

86. அஞ்ச வேண்டியவைக்கு அஞ்ச வேண்டும். பிறர்க்கு உதவி செய்யத் தயங்கக் கூடாது. நீதி வழங்குவதில் ஒரு பக்கம் சாயக் கூடாது. நேர்மையானவர் செயல்களில் சந்தேகம் கொள்ளக் கூடாது.

87. முயற்சியிருந்தால் செல்வம் பெருகும். செல்வம் இருந்தால் விரும்பியது கிடைக்கும். சோம்பல் இருந்தால் அழிவு நெருங்கும்.

88. கொடுங்கள், அதன் மதிப்பைக் கணக்கிடாதீர்கள். போரிடுங்கள், காயங்களைப் பொருட்படுத்தாதீர்கள். பாடுபடுங்கள், ஓய்வைத் தேடாதீர்கள்.

89. மங்கையர்கள் நெற்றிக்கு குங்குமம் இடாமல் ஒரு நிமிஷம்கூட இருக்கக்கூடாது. கர்ப்பிணிகள் தேங்காயை உடைக்கலாகாது. தேங்காய் உடைக்கும் இடத்திலும் இருக்கக் கூடாது.

90. இரவில் வீட்டில் பெருக்கலாகாது. பெருக்கி னால் குப்பையை வெளியே தெருவில் கொட்டக் கூடாது. பகலில் குப்பையை வீட்டினுள் ஒரு இடத்தில் குவித்து வைக்கக் கூடாது. அப்படி மூலையில் குவித்து வைத்தால் நல்ல நாளில் எல்லோருடனும் கலந்துயிருக்க முடியாமல் விலக்கி விடும்.

91. அன்னம், உப்பு, நெய் இவைகளைக் கையால் பரிமாறக் கூடாது. மங்கையர்கள் வளையல் அணியாமல் எதையும் பறிமாறக் கூடாது.

92. உரல், அம்மி, உலக்கை, வாயிற்படி, முறம் இவைகளில் உட்காரக் கூடாது.

93. அக்னியை வாயில் ஊதி எழுப்பவோ அணைக் கவோ கூடாது.

94. எந்தப் பொருளையும் இல்லை, இல்லை என்று கூறக் கூடாது. எந்தக் குறையையும் எண்ணி கண்ணீர் விடக் கூடாது.

95. மாலையில் விளக்கு ஏற்றி தெய்வத்தை வணங்க வேண்டும். மாலையில் பிறர் வீட்டிற்கு செல்லக் கூடாது.

96. கேட்பதை எல்லாம் நம்பக் கூடாது. ஆசைப்பட் டதை எல்லாம் செய்யக் கூடாது. தெரிந்ததை எல்லாம் செய்யக் கூடாது. பார்த்ததை எல்லாம் வாங்கக் கூடாது. இருப்பதை எல்லாம் உபயோகிக்கக் கூடாது. இப்படி யிருந்தால் எப்போதும் மகிழ்ச்சியாக யிருக்கலாம்.

97. கடுமையான உழைப்பு வெற்றிக்குத் திறவு கோல். பணிந்துபோதல் வெற்றியின் ரகசியம்.

98. கோபத்தைவிட அமைதியினால் அதிகம் சாதிக்க முடியும். தெரியாத விஷயங்களில் அவசரப்பட்டு தலை யிடக் கூடாது.

99. சமமானவர்கள்தான் நல்ல நண்பர்களாக முடியும்.

100. என்னதான் மறைத்தாலும் உண்மை சுபாவம் மாறாது.

101. கர்வம் ஏற்பட்டால் அழிவு வரும். அயோக்யர்க ளிடம் நீதி கிடைக்காது. எதையும் சரியான அளவில் செய்ய பழக வேண்டும். தீமை செய்தவர்களை நிழல் பின் தொடர்வது போல் கெடுதல் விலகாமல் பின் தொடரும்.

102. வீடுகளில் முற்றத்தில் துளசி மாடம் வைத்து வணங்குவது நல்லது. துளசியிருக்குமிடத்தில் ஈ, கொசு, விஷஜந்துக்கள், தொற்று நோய், சர்மவியாதி வராது.

103. துளசியை வெள்ளிக்கிழமையில் பறிக்கக் கூடாது. நீரில் கழுவக் கூடாது.

104. எப்போதும் வேலை செய்து கொண்டிருந்தால் கெட்ட எண்ணம் வராது.

105. திருமகளுக்குப் பிரியமானவர்கள்: செல்வத்தை யும் தான்யங்களையும் ஊதாரித் தனமாக செலவழிக்காத வர்கள், பிறர்க்கு உணவு அளித்து பிறகு உண்பவர்கள், அன்போடும் இனிமையாகவும் பேசுபவர்கள், தர்மம் செய்யும் உள்ளம் உடையவர்கள், பிற உயிர்க்கு துன்பம் செய்யாதவர்கள், எல்லா உயிரிடத்தும் அன்பு உடைய வர்கள், பெற்றோர், பெரியோர்களுக்கு அடங்கி நடப்ப வர், தொண்டு செய்பவர், பெரியோர் சொல்லைத்

தட்டாதவர், சோம்பல் இன்றி சுறுசுறுப்பாக செயல் படுபவர், கல்வி அறிவும் பண்பும் நிறைந்தவர், சிந் தனை, சொல், செயல் மூன்றிலும் சத்தியத்தைக் கடைபி டிப்பவர், உணவு உண்பதில் அதிக நேரம் செலவிடாத வர், மலரைக் கையில் வாங்கியதும் முகர்ந்து பார்க்காத வர், இவர்கள் இல்லங்களில் லக்ஷ்மி வசிப்பாள்.

106. அழகிய பெண்கள், சர்ச்சை செய்யாத சண்டை யிடாத பெண்கள் வாழும் இல்லங்களில் லக்ஷ்மி வாசம் செய்கிறாள்.

107. பணப்பெட்டி, தாமரை, வாசனை நிறைந்த மலர்கள், சங்கின் மத்திய பாகம், நெல்லி மரம், பரிசுத்தமான உடைகள், கற்புடைய மங்கையர் உள்ளம் ஆகியவற்றிலும் லக்ஷ்மி வாசம் செய்கிறாள்.

108. மகாலட்சுமி இருக்கும் இடங்கள்:-

யானையின் முகம், பசுவின் பின்புறம், வெள்ளை யான வாசனையுள்ள மலர்கள், தாம்பூலம், சந்தனம், விளக்கு, கன்னிப்பெண்கள், அதிகம் பேசாதவர்கள், உள்ளங்கை, குதிரை, டமாரம், பசுவின் கால்தூசி, வேள்விப் புகை, உத்தமர்கள் இருக்கும் இடம்.

109. பலத்தினால் அன்பைப் பெற முடியாது. அன்பு விலையில்லாதது. எதையும் ஆராய்ந்து செய்ய வேண் டும். முட்டாள்களுக்கு புத்தி சொல்லக் கூடாது. முட் டாள்கள் மற்றும் தன்னை அறிவாளிகள் என்று நினைத் துக் கொண்டிருப்பவர்கள் இவர்களிடம் ஆலோசனை பெறக்கூடாது.

110. அறிவுள்ளவர்கள் இருப்பவர்களைப் பற்றியோ இறந்தவர்களைப் பற்றியோ கவலைப்பட மாட்டார்கள்.

திடச்சித்தம் இருந்தால் இந்த உலகில் எதையும் சாதிக்க லாம். உருவத்தைக் கண்டு ஏமாறக் கூடாது.

111. அறிவற்றவர்களை விரோதித்துக் கொள்ளக் கூடாது. தீரவிசாரிக்காமல் நியாயம் வழங்கக் கூடாது. ஆராய்ந்து பார்க்காமல் நியாயம் வழங்கக் கூடாது. ஆராய்ந்து பார்க்காமல் யாருக்கும் உதவி செய்யக் கூடாது.

112. கவலையைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தால் அது வளர்ந்து கொண்டேயிருக்கும். அற்பர்களை அலட் சியம் செய்ய வேண்டும். நம்முடைய பலத்தைப் பற்றி அளவுக்கு மீறி நினைக்கக் கூடாது.

113. ஆபத்தை அறிந்து விலகுவதே அறிவுடமை. கத்துகிறவர்களால் காரியம் செய்து முடிக்க முடியாது. அமைதி எதையும் சாதிக்கும். வீண் பெருமை ஆபத்தில் முடியும். அடக்கம் அற்புதம் செய்யும். பசப்பு வார்த்தை களை நம்பக் கூடாது. பகைவனை எந்தக் காலத்திலும் நம்பக் கூடாது. பகையில் சிறியது, பெரியது என்று இல்லை.

114. விரோதியையும் வியாதியையும் முளையி லேயே கிள்ளி எறிய வேண்டும்.

115. இருக்கிற இடத்தில் திருப்தி அடைவது தான் மகிழ்ச்சியின் ரகசியம்.

116. பகைவர்கள், தீய நண்பர்கள், விலை மாதர்கள் ஆகியோரிடம் உண்மையாக நடந்து கொள்பவன் சுக மாக வாழ முடியாது. கடவுள், குரு, பெரியோர், தாய்,

ந்தை இவர்களிடம் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும்.

*117.* ஒத்த குலமும், ஒத்த செல்வமும் பொருந்தியவர் களிடையே திருமணமும், நட்பும் இருப்பதே நன்மை அளிக்கும்.

*118.* உறுதி மிக்க உள்ளம் வெற்றிக்கு அடிப்படை.

*119.* குலம், குணம், தகுதி, கல்வி, அழகு, செல்வம், இளமை ஆகிய ஏழு அம்சங்களை கவனித்து திருமணம் செய்து கொடுக்க வேண்டும்.

*120.* முட்டாள் நண்பனைவிட அறிவுள்ள எதிரி மேல். உற்சாகமும் ஆண்மையும் இல்லாவிட்டால் பகைவனை வெல்வது கடினம்.

*121.* சோம்பேறி, முயற்சியில்லாதவன், மனஉறுதி யில்லாதவன், வெளிப்படையாகப் பேசாதவன் இவர் களை திருமகள் விரும்ப மாட்டாள்.

*122.* கருமித்தனம், மடமைத்தனம், சபலபுத்தி, பொறாமை போன்ற குணங்களைக் கொண்டவர்களை விட்டு திருமகள் விலகி விடுவாள்.

*123.* திறமை உள்ளவனுக்கு சொந்த ஊர், அயலூர் என்ற வேறுபாடு கிடையாது. சந்தர்ப்பம் நம்மைத் தேடி வராது. நாம்தான் அதைத் தேடிப் பிடிக்க வேண்டும். சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி சாதுர்யமாக நடக்க வேண்டும்.

*124.* பிறர் உதவி செய்வார்கள் என்று எண்ணி சும்மா யிருந்து விடக்கூடாது. நம்முடைய பத்து விரல்கள்தான் உண்மையான நண்பர்கள்.

**125.** வாழ்க்கை எப்போதும் ஆபத்து நிறைந்தது. நாம் எதற்கும் தயாராக யிருக்க வேண்டும்.

**126.** நமக்கு சரி சமமான பலம், அந்தஸ்து, அறிவு, வயது - உள்ளவர்களுடன் நட்பு கொள்ள வேண்டும்.

**127.** விழித்தவுடன் பார்க்கத் தக்கவை:- தாமரை, பொன், விளக்கு, சூரியன், சந்தனம், சிவலிங்கம், கடல், கன்றை ஈன்ற பசு, வலக்கை, கற்புடைய மங்கையர், மிருதங்கம், கண்ணாடி, அரசன், காட்டு யானை, இறை நூல்கள்.

**128.** விழித்தவுடன் பார்க்கத் தகாதவை:- நோயாளி, அழுக்காடை உடுத்தியோர், தலை விரித்தவர், அழுக்கு மேனியர், கழுதை, எருமை, விளக்குமாறு, உலக்கை முதலியன.

**129.** ராகு காலத்திலும் எமகண்டத்திலும் நல்ல காரியங்கள் செய்யக் கூடாது. சூலையுள்ள திக்கில் பிரயாணம் செய்யக்கூடாது. குளிகைகளில் அசுப காரியங்கள் செய்யக்கூடாது.

**130.** பணிவும் அடக்கமும்தான் நிம்மதியான வாழ்க்கையைத் தரும். ஆணவமும் ஆடம்பரமும் வாழ்க்கையைச் சீரழித்து விடும்.

**131.** பெண்களுக்கு முன்னால் ஒருவன் முறையற்ற பேச்சுக்களைப் பேசக்கூடாது. தன்னைப் பற்றி பெருமைகள் அடித்துக் கொள்ளக்கூடாது.

**132.** வாழ்க்கையில் நாம் வெறுக்க வேண்டிய மூன்று விஷயங்கள் காமம், கோபம், அகம்பாவம். அடக்க வேண்டிய மூன்று: நாக்கு, உணர்ச்சி, சலனப்படும் மனம். துறக்க வேண்டியவை: தீயோர் சேர்க்கை,

நியாயமற்ற ஆசைகள், மற்றவர்கள் மூலம் என்ன சாதித்துக் கொள்ளலாம் என்று ஆதாயத்தைத் தேடி செயல்படுதல்.

*133.* கற்புடைய மங்கையரோடு கலந்து வாழும் வாழ்வும், பெருங்குடியில் பிறந்த நன்மக்களுடைய உறவும், கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம் உடையவர் நட்பும் நல்ல வாழ்வைத் தரும்.

*134.* கல்வி அறிவற்றவர்களுக்கு உறவினராக யிருப்பதும், மன உறுதியுடைய மனைவியை அடித்துத் துன்புறுத்துவதும், அறிவு இல்லாதவர்களை வீட்டிற்கு அழைப்பதும் பெரும் கேடு விளைவிக்கும்.

*135.* பகைவர் அறிய பெரும் செல்வத்துடன் வாழ்வதும், மாடுகள் நடுவில் கம்பு இன்றி நுழைவதும், துன்பம் செய்யும் கொடியவனைத் துணையாகக் கொள்வதும் துன்பத்தைக் கொடுக்கும்.

*136.* ஆறு குளங்களில் பழகாத துறைகளில் இறங்கிச் செல்வதும், அன்பற்ற மனைவியோடு கூடி வாழ்தலும், வறுமையால் வாடி வேற்றூருக்கு விருந்தினராகப் போகுதலும் துன்பத்தை உண்டாக்கும்.

*137.* உடலைப் பாதுகாக்கத் தெரியாத மக்களுடைய நட்பும், விருந்து செய்ய அஞ்சும் மனைவியுடன் வாழும் வாழ்வும், பெருந்தன்மையில்லாத் மக்களுக்கு அருகில் குடியிருந்து வருவதும் நன்மை அளிக்காது.

*138.* இளமையில் கற்ற கல்வியும், பெற்றோரைப் போற்றி வழிப்பட்டு வந்த ஒழுக்கமும், பிறகு பெரியோரைச் சார்ந்து வாழ்தலும் உயர்வைத் தரும்.

139. இனிய சொல்லை உடைய சிறந்த பெண்கள், நல்ல வழியில் தேடிய் செல்வம், நாவுக்கு இனிதாகச் சமைத்த உணவு ஆகியவை போற்றத் தகுந்தவை.

140. சொற்புத்தி கேட்டு நடக்காத பிள்ளை, நாவடக்கமில்லாமல் கண்டதைப் பேசும் கணவன், பொய் கூறிப் பொருள்களை அழிக்கும் மனைவி மூவரும் வாழத் தகுதியற்றவர்கள்.

141. உருவத்தைக் கண்டு மயங்கக் கூடாது. அழகான முகம் குரூரமான இதயத்தை மறைக்கும்.

142. முட்டாள் பிறரைக் குறை கூறுவான். அரை குறை தன்னையே குறை கூறிக் கொள்வான். ஆனால் விவேகி இரண்டையும் செய்ய மாட்டான்.

143. வியாதி, பகை, நெருப்பு, பாம்பு இவை சிறிதானாலும் விட்டு வைக்கலாகாது.

144. கடமையைச் செய். பலனை எதிர் பாராதே. கடமையைச் செய்பவனுக்கு துக்கம் தூரத்தில் நிற்கும்.

145. சுற்றத்தார் அனைவரும் சுயநலம் உள்ளவர்கள். விலகி வாழ்வது நிம்மதியைத் தரும்.

146. கடந்த காலம் ஒரு கனவு. நிகழ்காலம். நம் கையில் இல்லை. இன்று ஒரு முறைதான் வரும். இன்றே நல்வாழ்வை அனுபவிக்க வேண்டும். இன்று செய்ய வேண்டியதை நாளை என்று ஒத்திப் போடக்கூடாது.

147. அறிவில்லாதவர்க்ள் யோசனை யின்றி பேசுவர் அல்லது பேசிவிட்டு யோசிப்பார்கள். ஆனால் விவேகி

எதுவும் பேசமாட்டான். பிறருடைய தவறுகளைப் பார்த்து தன்னைத்தானே உயர்த்திக் கொள்வான்.

*148.* எதையும் எதிர்பார்க்காதவன் பாக்கியசாலி. ஏனெனில் அவனுக்கு ஏமாற்றம் கிடையாது. சுகத்தை யும், துக்கத்தையும், லாபத்தையும், நஷ்டத்தையும், வெற்றியையும், தோல்வியையும் சமமாக பாவிக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

*149.* நல்ல நாக்கு ஒரு நல்ல ஆயுதம். அதை தவறான வழியில் உபயோகிக்கக் கூடாது.

*150.* தானத்தில் மிகச் சிறந்தது அன்னதானம். பசி என்று ஒருவர் வந்தால் குலம், கோத்திரம் விசாரிக்கக் கூடாது. உணவு அளித்து அவர் பசியைப் போக்க வேண்டும்.

*151.* அறிவாளிகளான மனிதர்கள் தன் சக்திக்கு ஏற்ற வாறு தர்மம் செய்கிறார்கள். கிடைக்காத பொருளின் மேல் ஆசை வைப்பதில்லை. நஷ்டமான பொருள் குறித்து துயரப்படுவதில்லை. ஆபத்துக்கள் வந்தபோது கலங்குவது இல்லை. தன்னை யாராவது புகழ்ந்தால் சந்தோஷப்படுவதில்லை. அவமதித்தால் கவலைப்படுவ தில்லை.

*152.* ரொம்பவும் வெகுளியாக யிருப்பவனையும், அதிகமாகக் கொடுப்பவனையும், அதிசூரனையும், நிய மத்தை அதிகமாக அனுஷ்டிப்பவனையும், தன்னை பெரியவனாக நினைத்துக் கர்வம் கொண்டவனையும் லக்ஷ்மி விரும்புவதில்லை.

*153.* முயற்சி, திறமை, ஜாக்கிரதையாகயிருத்தல், தைரியம், ஞாபக சக்தி, நன்கு ஆலோசித்து ஆரம்பித்தல் இவை செல்வத்திற்கு காரணமாகும்.

*154.* தபஸ்விகளுக்கு தவமே பலம். வேத விற்பன்னர்களுக்கு வேதம் பலம். துஷ்டர்களுக்கு ஹிம்சையே பலம். நற்குணம் உள்ளவர்களுக்கு பொறுமையே பலம்.

*155.* தனக்கு எது கெடுதியோ அதைப் பிறர்க்குச் செய்ய நினைக்கக் கூடாது.

*156.* ஸ்திரீகளிடத்திலும், வஞ்சகனிடத்திலும், சோம்பேறிகளிடத்திலும், கொடுமை உள்ளவனிடத்திலும், கர்வம் கொண்டவனிடத்திலும், திருடனிடத்திலும், நன்றி மறந்தவனிடத்திலும், நாஸ்திகனிடத்திலும் நம்பிக்கை வைக்கக்கூடாது.

*157.* தினமும் பெரியோர்களையும் தெய்வத்தையும் ஸ்மரிப்பவனுக்கு, கீர்த்தி தானம் முதலியவற்றால் ஏற்படும் புகழும், ஆயஸ்ஸும்; கல்வியினால் ஏற்படும் புகழும் ஆரோக்கியமும் தினந்தோறும் விருத்தியாகும்.

*158.* மிகுந்த கஷ்டத்தைத் தரும் காரியத்தால் எந்தப் பொருள் கிடைக்குமோ, தர்மத்தை மீறுவதால் எந்தப் பொருள் கிடைக்குமோ, சத்ருக்களை வணங்குவதால் எந்தப் பொருள் கிடைக்குமோ அப்பொருளை அடைய விரும்பக்கூடாது.

*159.* சக்தியில்லாதவர்களுக்கு பொறுமை குணமாகிறது. சக்தியுள்ளவர்களுக்கு பொறுமை அலங்காரமாகிறது. பொறுமையால் உலகை வசப்படுத்தலாம். ஏன், பொறுமையாய் எல்லாவற்றையும் சாதிக்கலாம்.

*160.* இனிமையாகவும் இதயத்தை மயக்கும் வகையிலும் பேசக் கூடியவர்களை விட நமக்கு நல்லது செய்யக்

கூடியவர்களை, தவறு செய்தால் கண்டித்து திருத்தக் கூடியவர்களை நண்பர்களாக அடைய வேண்டும்.

161. மாதர்களுடனோ, தாய், சகோதரி, வயதுவந்த பெண்களுடனோ பேசும்போது நல்ல விஷயங்களையே பேச வேண்டும்.

162. பெண்களின் முகம், பறவைகளால் கொத்தப் பட்ட பழ்வகைகள், மாட்டின் மடி, குழந்தைகளின் வாய் இவைகளுக்கு அசுத்தம் இல்லை.

163. பெண்கள் வாசலில் நின்று கொண்டு வருவோரையும் போகிறவர்களையும் பார்த்து கொண்டு நிற்கக் கூடாது. பழக்கம் இல்லாதவர்களுடன் பேசக் கூடாது. கார்ணம் இல்லாமல் சிரிக்கக் கூடாது. ஆண் துணையின்றி இரவில் நடமாடக் கூடாது. மாலையில் விளக்கு ஏற்றியபின் பிற வீடுகளுக்குப் போகக் கூடாது. யாரையும் எதையும் கேட்கக் கூடாது.

164. பெண்கள் ஆண்களுடனும் ஆண்கள் பெண்களுடனும் சேர்ந்து உண்ணுவதும் கூடாது. கணவன், மனைவி சேர்ந்து உண்ணக் கூடாது. விவாக சமயத்திலும், யாத்திரை செல்லும்போதும் சேர்ந்து உண்ணலாம்.

165. நம் வீட்டில் சுபகாரியம் நடக்கும்போது யார் வந்தாலும் உபசரிக்க வேண்டும்.

166. எப்போதும் குளிர்ந்த நீரில் தான் குளிக்க வேண்டும். உடல் நல்ல நிலையில் இல்லாதவர்களும் பிறந்த குழந்தையும் வென்னீரில் குளிக்கலாம். ஒருவன் குளித்துக் கொண்டிருக்கும்போது அவனுக்கு பின்பு றமோ, முன்புறமோ குளிக்கக் கூடாது. பக்கவாட்டில்

நின்று குளிக்க வேண்டும். குளிக்கும்போது பேசக்கூடாது. சிரிக்கக் கூடாது.

*167.* ஒருவன் பிரேதம் இருக்கும் வீட்டிற்குச் சென்றாலும், ஊர்வலத்தில் கலந்து கொண்டாலும், துக்கம் விசாரிக்கும்போது கண்ணீர் சிந்தினாலும், குளித்துவிட்டு வீட்டிற்குச் செல்ல வேண்டும்.

*168.* மனிதனின் முதல் விரோதி பயம்தான். பயம் தான் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம். பயத்தை ஒழித்தால் நிம்மதியாக வாழலாம்.

*169.* நம்மைவிட வலிமை மிக்கவர்களோடு பகை கொள்ளக் கூடாது. அவர்களுடன் சமாதானமாக வாழ முயற்சி செய்ய வேண்டும். எந்த முயற்சியிலும் வெற்றி பெறவேண்டுமானால் அமைதியாக யிருக்க வேண்டும். சிந்தித்து செயல்பட வேண்டும்.

*170.* பணத்தை சம்பாதித்து சேமித்து வைப்பவன் வாழ்க்கையில் வெற்றி பெறுவான். உள்ளத்தில் உறுதி, இடைவிடா முயற்சி, தன்னம்பிக்கை வாழ்க்கையின் வெற்றிக்கு அஸ்திவாரம் அமைக்கும்.

*171.* வாழ்க்கை ஒரு போராட்டம். சந்தோஷமாக இதில் குதிப்பவன் வெற்றி பெறுவான். வாழ்க்கை ஒரு விளையாட்டு. திறமையாக விளையாட வேண்டும். நாளை சந்தோஷமாக யிருக்க வேண்டும் என்றால் இன்றே அதற்கு முயற்சிக்க வேண்டும்.

*172.* சகிப்புத் தன்மை, பொறுமை, விட்டுக் கொடுக்கும் தன்மை, அளவிட முடியாத அன்பு, பிறர் நலத்தில் அக்கறை, பொறாமை இன்மை இவைகளை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

173. ஆசையைத் துறந்தால் செல்வந்தனாகலாம். சிறிது சிறிதாக சேமித்தால் அது பெரிய தொகையாகும். பிறர்க்கு உதவி செய்தால் வளரும். தெய்வபக்தி யிருந் தால் அது நிலைக்கும்.

174. நெஞ்சு உறுதியுள்ளவன் சுயமாக பயமின்றி சிந்திப்பான், தாமதம் இன்றி நடவடிக்கை எடுப்பான். எதைப்பற்றியும் கவலைப்பட மாட்டான்.

175. எவரையும் எக்காரணம் கொண்டும் பகைக்கக் கூடாது. நம்மைவிட வலிமை மிகுந்தவரிடம் பகை கொள்ளக் கூடாது. பகைவரிடம் சமாதானம் பேசக் கூடாது. அப்படி பேசினால் நாம் பலகீனமாக யிருப்பதா கக் கருதி தீங்கு செய்வான்.

176. பெண்கள் இருபது வயதுவரை தகப்பன் ஆதர விலும், பிறகு விவாகம் ஆனபின் நாற்பது வயது வரை கணவன் ஆதரவிலும் பிறகு மகன் ஆதரவிலும் இருக்க வேண்டும். சுயேச்சையாக இருக்கக் கூடாது.

177. பெண்கள் தந்தையிடமும், விவாகமான பெண் கள் கணவரிடமும் அனுமதி பெற்றுத்தான் விரதம் அனுஷ்டிக்க வேண்டும். அனுமதியில்லாமல் செய்யப்ப டும் விரதம் எந்தப் பலனையும் அளிக்காது.

178. பரணி, கார்த்திகை, திருவாதிரை, பூரம், ஆயில் யம், கேட்டை, சித்திரை, விசாகம், சுவாதி, மகம், இந்த நட்சத்திரம் வரும் நாட்களில் பிரயாணம் செய்யக் கூடாது. பிரதமை, அஷ்டமி, நவமி, திதிகளும் கூடாது.

*179.* ஒரு மனிதன் எவ்வளவுக்கு எவ்வளவு நல்ல காரியத்தில் மனதை செலுத்துகிறானோ, அவ்வளவுக்கு அவ்வளவு செல்வம் கிடைக்கும்.

*180.* மனிதன் எப்படிப்பட்டவர்களுடன் சேர்கிறானோ எப்படிப்பட்டவர்களுடன் வேலை செய்கிறானோ, எப்படிப்பட்டவனாக ஆக விரும்புகிறானோ அப்படிப்பட்டவனாக ஆகி விடுகிறான். எதெதலிருந்து விலகுகிறானோ அதிலிருந்து விடுபடுகிறான். எல்லாவற்றிலிருந்தும் விலகினால் துன்பம் இல்லை.

*181.* எல்லோருக்கும் நன்மையே ஏற்படக் கருதி ஒருவனுக்கும் கெடுதி செய்ய மனமில்லாமல் உண்மையே பேசிக்கொண்டு இருப்பவன் உத்தமனாவான்.

*182.* நல்லவர்களை விரோதிப்பது கூடாது. சுலபமாகச் செய்யக்கூடிய தர்மத்தைத் தாமதமின்றி செய்ய வேண்டும்.

*183.* அஹிம்சை ஒரு தர்மமாகும். பிற உயிர்க்கு ஒரு தீங்கும் செய்யக்கூடாது.

*184.* அதிகமான அகங்காரம், கோபம், அதிகமாக பேசுதல், சுயநலம், தர்மம் செய்யாமலிருப்பது துரோகம் செய்வது இவை மனிதனின் ஆயுளைக் குறைக்கிறது.

*185.* தனிமையில் இருந்து ஆலோசனை செய்ய வேண்டும். நம்மைவிட அறிவு மிகுந்தவர்களிடம் ஆலோசனை பெறவேண்டும். கீழ்த்தரமானவர்களிடம் ஆலோசனை பெறக்கூடாது.

*186.* எவன் பாவத்தை அளிக்கும் காரியங்களை அறிந்து ஆரம்பிக்காமல் இருக்கிறானோ, அவன் விருத்தி அடைவான். எவன் முன்பு செய்த பாவத்தைத் தொடர்ந்து யோசியாமல் பின்பும் செய்கிறானோ அவன் துன்பங்களை அனுபவிப்பான்.

*187.* எப்போதும் துக்கத்தில் இருப்பவனிடமும், நாஸ்திகனிடமும், கர்வம் கொண்டவர்களிடத்திலும், சோம்பேறிகளிடத்திலும், அடக்கம் இல்லாதவர்களிடத் திலும், ஊக்கம் இல்லாதவர்களிடமும் செல்வம் நிற்ப தில்லை.

*188.* தாய் மறைந்தால் வாய்க்கு ருசியாக உணவு கிடைக்காது, தந்தை மறைந்தால் கல்வி கற்பது கஷ்டம், சகோதரன் மறைந்தால் உடலில் பாதி நஷ்டம், மனைவி மறைந்தால் எல்லாமே நஷ்டம்.

*189.* நல்ல நண்பர்களைத் தேடி அடைய வேண்டும். குற்றங் குறைகளைக் கூறி நம்மை திருத்துபவன் நல்ல நண்பனாகும். ஒரு நண்பன் ஆயிரம் உறவினருக்குச் சமானம்.

*190.* இடது கையால் ஆசனம் போட்டுக் கொண்டால் ஆயுள் நாசம். இடது கையால் எண்ணெய் தேய்த்துக் கொண்டால் புத்திரர் நாசம். தன் இடது கையால் சாப்பாடு போட்டுக் கொண்டால் தன நாசம். தன் இடது கையால் படுக்கை போட்டுக் கொண்டால் இருப்பிடம் நாசம்.

*191.* வீடு கட்டும்போது முழுவதும் முடித்த பிறகே கிரஹப்பிரவேசம் செய்ய வேண்டும். அரை குறையாக கட்டி முடித்த வீட்டில் குடியேறினால் எல்லாமே அரைகுறைதான்.

192. அதிகமாக கஷ்டப்பட்டு வரும் பொருளையும் தர்மத்திற்கு விரோதமாக வரும் பொருளையும் விரோதிகளை வணங்கி பெறும் பொருளையும் அடைய விரும்பக் கூடாது.

193. பொருள் சம்பாதிப்பது தான தர்மங்கள் செய்வதற்காக. கல்வி கற்பது ஒழுக்கத்தை வளர்ப்பதற்காக. சம்பாதித்த பணத்தையும் கற்ற கல்வியையும் பிறர் நலத்திற்காக பயன்படுத்த வேண்டும்.

194. கோவிலின் நிழல் படும்படி வீடு கட்டக் கூடாது. மூன்று ரோடுகள் சந்திக்கும் இடத்தில் வீடு கட்டக் கூடாது. ஊருக்கு வெளியே ஜன சந்தடி இல்லாதயிடத்தில் வீடு கட்டக் கூடாது.

195. அடக்கம் கீர்த்தியை அதிகரிக்கும். தைரியம் கஷ்டத்தைப் போக்கும். பொறுமை கோபத்தைப் போக்கும். ஆசாரமான எண்ணம் முகவசீகரத்தை காக்கும்.

196. தூய எண்ணம், தூய செய்கைகள், இரக்க குணம், பிறர்க்கு தன்னாலான சின்ன சின்ன உதவிகள் வாழ்வை வளப்படுத்தும்.

197. எந்த வீட்டில் சாப்பாட்டிற்கு ருசியாக ஊறுகாய் யிருக்கிறதோ அந்த வீட்டில் தரித்திரம் யிருக்காது. எந்த வீட்டில் விருந்தினருக்கு உபசாரம் மனப்பூர்வமாக செய்யப்படுகிறதோ அங்கு திருமகள் தங்கியிருப்பாள்.

198. கவலை ஆயுளைக் குறைக்கும். எதைப் பற்றியும் கவலைப்படக் கூடாது. நடப்பது நடக்கட்டும் என்று அமைதியாக யிருக்கவேண்டும். எல்லாம் கடவுள் இஷ்டப்படி நடக்கும்.

199. மனதை ஒருநிலைப்படுத்தி பிறவிஷயங்களைப் பற்றி சிந்திக்காமல் கடவுளின் பிரார்த்தனையில் இறங்க வேண்டும்.

200. விரோதிக்கு மன்னிப்பு கொடுக்கலாம். ஆனால் நண்பனாக ஏற்றுக் கொள்ளக் கூடாது.

201. முகஸ்துதி செய்பவர்களை நம்பக் கூடாது. சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி இனிமையாக பேசுபவர்களை நம்பக்கூடாது. உண்மை பேசுபவர்களை அது கசப்பாயிருந்தாலும் நம்பலாம்.

202. உனக்கு நல்ல யோசனைகளை உன்னால்தான் தரமுடியும். பிறர் தரும் யோசனைகளை ஆராயாமல் ஏற்றுக் கொள்ளக் கூடாது.

203. எல்லாவற்றையும் பார்க்க வேண்டும். குறைவாகப் பேசவேண்டும். எதையும் எழுதித் தரக் கூடாது. பிறர்க்கு உதவி செய்யலாம். ஆனால் ஜாமீன் கொடுக்கக் கூடாது.

204. நாம் இஷ்டப்பட்டதை கடவுள் கொடுக்க மாட்டார். நமக்குத் தேவையானதைக் கொடுப்பார். அதற்குத் தகுதியுள்ளவனாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

205. சந்தேகம் ஒரு தொற்று நோய். அது விரோதியாக யிருந்து சந்தோஷத்தைக் கெடுக்கும். யாரையும் காரணமின்றி சந்தேகிக்கக் கூடாது.

206. கடந்த காலம் மறைந்து விட்டது. எதிர் காலம் நம் கையில் இல்லை. இப்போது உள்ள காலத்தில் வாழவேண்டும். நாளை என்று எதையும் ஒத்திப் போடக் கூடாது. நாளை செய்வதை இன்றே செய்.

207. செல்வம்தான் மனிதனின் பலம். அழகுதான் பெண்ணின் பலம். அறிவுதான் இளைஞனின் பலம்.

208. சிக்கனமும் ஒரு சேமிப்புதான். வீணான செலவுகள் வாழ்வைச் சீரழிக்கும். வரவுக்கு மேல் செலவழிக்கக் கூடாது. தேவையில்லாததை வாங்கக் கூடாது. தேவையுள்ளதை பிறர்க்குக் கொடுக்கக் கூடாது.

209. திறந்த மனதோடுயிருங்கள். எதையும் துணிச்சலாக நேரடியாக சந்தியுங்கள். எந்த பிரச்னையிலும் மனம் கலங்காதீர்கள். உடனுக்குடன் நடவடிக்கை எடுங்கள். பிரச்னைகள், சோதனைகள் மன உறுதிக்கு முன்னால் நிற்க முடியாது.

210. வாழ்க்கைக்கு உதவுபவன் விசுவாசமான நண்பன். நண்பர்களிடம் உண்மையாகயிருங்கள்.

211. திறமை சந்தர்ப்பங்களைத் தேடி அலைவதில்லை. சந்தர்ப்பங்கள் வரும்போது அதைத் தவறாமல் பிடித்துக் கொள்ளும்.

212. உறுதியுள்ள உள்ளத்தை அசைக்க எதனாலும் முடியாது. உறுதியான உள்ளம் சிறு தொல்லைகளைக் கண்டு அஞ்சாது.

213. பிறர் கூறுவதைப் பொறுமையாகக் கேளுங்கள். பிறர் செய்வதை அமைதியாகப் பாருங்கள். உங்கள் எண்ணத்தை அவசரப்பட்டு வெளியிடாதீர்கள். எது உண்மை, எது போலி என்று அறிபவன்தான் உண்மையான அறிவாளி.

214. உற்சாகத்துடன் செயல்பட்டால் வெற்றி கிட்டும். உற்சாகம்தான் சந்தோஷம். பிறரைச் சந்தோஷப்படுத்துங்கள். உங்களுக்கு மகிழ்ச்சி தானாக வரும்.

215. முதலில் சிந்திக்க வேண்டும். பிறகு முடிவு எடுக்க வேண்டும். முடிவு எடுத்தபிறகு பின்வாங்கக் கூடாது.

216. பிறர் நினைப்பதைப் பற்றிக் கவலைப் படக்கூடாது. நாம் என்ன நினைக்கிறோமோ அதைப்பற்றிதான் கவலைப்பட வேண்டும். தன்னம்பிக்கை, தாமதம் இன்றி எடுக்கும் முடிவு, இதுதான் வெற்றியை நிர்ணயிக்கும்.

217. அறிவு அதிகமாகும்போது பேச்சு குறையும். பேச்சு குறையும்போது சிந்தனை உருவாகும். சிந்தனை பெரிய சாதனைகளை உருவாக்கும்.

218. எப்போதும் நல்லதையே எதிர்பார்க்க வேண்டும். மாறாக ஏதாவது ஏற்பட்டால் அதையும் ஏற்க தயாராகயிருக்க வேண்டும். நல்லதும் கெட்டதும் கலந்ததுதான் வாழ்வு. பிறப்பு நம் கையில் இல்லை. இறப்பும் நம் கையில் இல்லை. நடுவில் உள்ள வாழ்க்கையை அனுபவிப்போம்.

219. கடன் வாங்கக் கூடாது. கடன் வாங்கினால் திருப்பிக் கொடுக்க வேண்டும். தீர்க்க முடியாத கடன், வாழ்வில் துன்பத்தைக் கொடுக்கும்.

220. கஷ்டங்களை அமைதியாக ஏற்றுக் கொள்வது, பெருந்தன்மையாக நடப்பது, சலனமின்றி வாழ்வது இதுதான் வாழ்வின் குறிக்கோள்.

221. தைரியத்தைக் கைவிடக்கூடாது. தைரியம் போனால் எல்லாம் போய்விடும்.

222. சந்தேகம் உண்மையான நண்பன் அல்ல. சந்தோஷத்தைக் கெடுக்கும் ஒரு வியாதி. இதை நெருங்க விடக்கூடாது.

223. கஷ்டங்கள் மனதிற்கு வலிவூட்டும். உழைப்பு உடலை உறுதியாக்கும்.

224. அறிவு குறைந்தவர்களிடத்தில் கர்வம் இருக்கும். அறிவுள்ளவர் அடக்கமாக யிருப்பர். அறிவு குறைந்தவர் எல்லாம் தெரிந்ததுபோல் பாவனை செய்வர்.

225. பிறர் நமக்கு எது செய்யக்கூடாது என்று நினைக்கிறோமோ அதை நாம் பிறர்க்கு செய்யக் கூடாது. பிறரைப் பற்றி அவர் இல்லாதபோது ஏளனமாகப் பேசக்கூடாது.

226. வாழ்க்கையின் முதல் எதிரி பயம். இது அரை குறை அறிவால் உண்டாகிறது. அரைகுறை அறிவு ஆபத்தானது. அறியாமை அதைவிட ஆபத்தானது.

227. ஒழுக்கம் என்பது நாம் கடைப்பிடிக்க வேண்டிய வாழ்வின் நியதி. நமக்கு நாமே அளிக்கும் மதிப்பு. ஒழுக்கம் உயர்வை தரும்.

228. உண்மையாக உழைத்துக் கொண்டிருப்பவன் கவலைப்பட ஏதுமில்லை. கவலை சோம்பேறிகளுக்கு சொந்தமானது.

229. சந்தோஷத்தை ஒழுக்கத்தின் மீதுதான் அமைக்க முடியும். உண்மைதான் அஸ்திவாரமாக யிருக்க வேண்டும்.

230. எதுவும் தானாக வராது. முயற்சி யிருந்தால்தான் நல்லது வரும். விடாமுயற்சி, பொறுமை, தூய்மை இம்மூன்றும் வெற்றியைத் தேடிக் கொடுக்கும்.

231. பணம் தேடுவது நிரம்பக் கஷ்டமானது. அதை விட அதைக் காப்பாற்றுவது அதிகக் கஷ்டம். சம்பாதித்த பணத்தை தீயவழியில் செலவழிப்பது தான் மிகவும் சுலபமாகும். ஆனால் இது குற்றமானது.

232. முன்னதாக படுத்து சூர்யோதயத்திற்கு முன் னால் எழுந்தால் உடல் ஆரோக்யம், செல்வம் பெருகும். மூளை சுறுசுறுப்படையும். சோம்பேறித் தனத்தை விரட் டும்.

233. அன்பு இயற்கையாக உண்டாவது. அதை யாரும் விலைக்கு வாங்க முடியாது. பிறர் இதயங்களை அன்பால் வசப்படுத்த வேண்டும். அன்பு சாதித்ததை வேறு எதுவும் சாதித்தது இல்லை.

234. பொறுமையைக் காட்டிலும் உயர்ந்த தவ மில்லை. திருப்தியைக் காட்டிலும் உயர்ந்த இன்ப மில்லை. ஆசையைக் காட்டிலும் உயர்ந்த தீமையில்லை. கருணையைக் காட்டிலும் பெரிய அறமில்லை. மன்னித் தலைக் காட்டிலும் ஆற்றல் மிக்க ஆயுதமில்லை.

235. கடவுளை நம்புவது மனிதனின் கடமை. இருத யத்தில் தூய்மை உடையவர்கள், இரக்க குணம் உள்ளவர் கள், பிறர்மீது அன்பு காட்டுபவர்கள் இறைவனை அடைய முடியும்.

236. மன நிம்மதி, சந்தோஷம், அன்பு, தவம், தியாகம், பொறுமை இவை கடவுளை தியானம் செய்வதால் உண்டாகிறது.

**237.** தியானத்தின் மூலம் தைரியம், மனத்தூய்மை, புலன்களை அடக்குதல், தெய்வீக உணர்வு நேர்மை உண்டாகிறது. தினசரி கடவுளை வணங்கி அவர் அருளைப் பெறவேண்டும். தெய்வத்தின் உதவியின்றி எதுவும் எப்போதும் நடக்காது.

**238.** எந்த வீட்டில் பெண்கள் கௌரவமாக நடத்தப்படுகிறார்களோ, எந்த வீட்டில் பெண்கள் சிரித்துக் கொண்டு சந்தோஷமாக யிருக்கிறார்களோ அங்கு திருமகள் குடியேறுவாள்.

**239.** நாம் ஒருவருக்குச் செய்த உதவிகளை உடனே மறந்துவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் நமக்கு ஒரு உதவி சிறிதாகயிருந்தாலும் செய்தவர்களை மறக்கக்கூடாது.

**240.** வஞ்சனையின்றி நியாயமாக நடந்தால் கோவில் சென்று பிரார்த்தனை செய்ய வேண்டியதில்லை. நாம் செய்யும் வேலையே ஒரு பிரார்த்தனையாகும்.

**241.** கடவுளிடம் அது வேண்டும் இது வேண்டும் என்று கேட்கத் தேவையில்லை. அவருக்குத் தெரியும் நமக்கு என்னென்ன தேவை என்று. மனிதர்களை நம்புவதைவிட கடவுளை நம்புவது மேல்.

**242.** அறிவுள்ளவர்கள் அழைப்பு யில்லாமல் பிறர் வீட்டிற்குப் போகார். தன்னைக் கேளாமல் அறிவுரை கூறமாட்டார்.

**243.** யாரையும் அளவுக்கு மீறி புகழ்ந்து பேசக் கூடாது. உண்மையை பேசுவதற்கு உள்ள மதிப்பு அதற்கு கிடையாது. உண்மை மெதுவாக ஆனாலும் வெல்லும். ஒரு பொய் சொன்னால் அதை மறைக்கப்

பல பொய்கள் தேவைப்படும். உண்மை அப்படியல்ல. ஒரு தடவை சொன்னால் போதும்.

244. ஒருவரின் பேச்சைக் கண்டு எடை போடக் கூடாது. பண்பைக் கொண்டு எடை போடவேண்டும். பண்பாடு உள்ளவர்களிடம் நல்ல நடத்தை யிருக்கும். அது இல்லாதவர்களிடம் கவர்ச்சியான பேச்சு மட்டும் தான் இருக்கும்.

245. பிறருடைய துன்பங்கள்ளக் கண்டு மகிழக் கூடாது. பிறர் அனுபவிக்கும் இன்பங்களைக் கண்டு பொறாமைப்படக்கூடாது. நமக்கு என்று உள்ளதைக் கொண்டு திருப்திப்பட வேண்டும்.

246. ஆசை அல்லலை உண்டாக்கும். பேராசை பெரிய ஆபத்தை உண்டாக்கும். நல்ல எண்ணம் உள்ளவ னிடத்தில் ஆசை நுழைவதில்லை.

247. சிரிப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள். அது இதயத் தின் இசை. சிந்திப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள், அது சக்தியின் பிறப்பிடம். விளையாட நேரம் ஒதுக்குங்கள், அது இளமையின் ரகசியம். படிக்க நேரம் ஒதுக்குங்கள், அது அறிவின் ஊற்று. நட்புக்கு நேரம் ஒதுக்குங்கள், அது மகிழ்ச்சிக்கு வழி. உழைக்க நேரம் ஒதுக்குங்கள், அது வெற்றியின் விலை.

248. உழைப்பின் மூலம்தான் செல்வம் வரும். தர்மத் தின் மூலம் அது நிலைக்கும். செல்வத்தை தான் மட்டும் அனுபவிக்காமல் எல்லோருக்கும் உதவும்படிச் செய்ய வேண்டும்.

249. தூய உள்ளம், தூய சிந்தனை, குற்றமற்ற மனசாட்சி இவை எந்த துன்பங்களையும் தாங்கிக் கொள்ளும்.

**250.** குறித்த நேரத்தில் அளிக்கப்படும் நல்ல ஆலோசனைகளை ஏற்றுக் கொள்ளத் தயங்கக் கூடாது.

**251.** தைரியம், ஆபத்தை எதிர்த்து போராடுவதில் மட்டும்மல்ல, நியாயமான விஷயத்தில் உறுதியாக இருந்து நடப்பதிலும் அடங்கியுள்ளது.

**252.** சேமிக்க வேண்டிய நேரத்தில் செலவு செய்யக்கூடாது. செலவழிக்க வேண்டிய நேரத்தில் மிச்சம் பண்ணக்கூடாது. வரவுக்குமேல் செலவு யிருக்கக் கூடாது.

**253.** பணம் வாழ்க்கையில் முக்கியம்தான். ஆனால் அதைவிட குணம் முக்கியம், ஒழுக்கம் முக்கியம், தூய உள்ளம், தூய சிந்தனை, தூய நடத்தை முக்கியம். இவை இல்லாமல் பணம் மட்டும் இருந்தால் பயன் இல்லை.

**254.** பணம் அறிவாளிகள் சொன்னபடி நடக்கும். ஆனால் அறிவற்றவர்களை அது ஆட்டிப் படைக்கும். பணம் இருக்கும்போது நமக்கு யாரையும் தெரியாது. பணம் இல்லாதபோது நம்மை யாருக்கும் தெரியாது.

**255.** கல்வி கற்றபின் மாணவர்கள் ஆசிரியர்களை மறந்து விடுவார்கள். வியாதி குணமானபின் நோயாளி வைத்தியரை மறந்து விடுவான். விவாகம் ஆனபின் மகன் பெற்றோரை மறந்து விடுவான். பணம் வந்தால் நாம் எல்லோரையும் மறந்து விடுவோம். ஆனால், இவையெல்லாம் சரியல்ல.

**256.** உதவி செய்பவன்தான் உறவினன். அன்பு காட்டுபவள்தான் மனைவி. நன்றியுள்ளவன்தான் நண்பன்.

நம் சொற்படி கேட்டு நடப்பவர்கள்தான் நம் குழந்தைகள். ஏனையோர் அன்னியரே.

257. இந்த உலகம் விசித்திரமானது. பணக்காரர்களுக்கு வளைந்து கொடுக்கும். ஏழையை எட்டி உதைக்கும். ஏழைகள் பணக்காரர்கள் ஆவோம் என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள். பணக்காரர்கள் ஏழையாகிவிடுவோம் என்று பயப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இரண்டுங்கெட்டான்கள் வாழத் தெரியாமல் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள்.

258. அத்திப்பூவைப் பார்க்கலாம், வெள்ளைக் காகத்தையும் பார்க்கலாம், பாம்பின் கால்களைப் பார்க்கலாம், பெண்ணின் மனதில் யிருப்பதைப் பார்க்க முடியாது.

259. மகன் நல்லவனாகயிருந்தால் சேமித்து வைக்க வேண்டியதில்லை. மகன் பொல்லாதவனாக யிருந்தால் சேமித்துப் பயனில்லை. மகனை நல்லவ்னாக, அறிவுள்ளவனாக, ஒழுக்கம் உள்ளவனாக ஆக்குவது தந்தையின் கடமை.

260. விரோதிகளைவிட முகஸ்துதி செய்பவர்களிடம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். விரோதிகள் நேரடியாக எதிர்ப்பார்கள். முகஸ்துதி செய்பவர்கள் நமக்குத் தெரியாமலே குழி ப்றிப்பார்கள்.

261. விரோதிகளை அடையாளம் கண்டு கொள்ளலாம். நல்ல நண்பர்களை அடையாளம் காண்பது கடினம். முட்டாள் நண்பனைவிட அறிவுள்ள விரோதி மேல்.

262. வாக்குறுதி ஒரு . கடன். யாருக்கும் வாக்குக் கொடுக்கக்கூடாது. சொன்னபடி நிறைவேற்ற முடியாமலிருக்கும்போது ஒதுங்கிக் கொள்ள வேண்டும்.

263. விதி, விருப்பம் உள்ளவர்களை மெதுவாக அழைத்துச் செல்லும். விருப்பமற்றவர்களை இழுத்துச் செல்லும். விதியை மாற்றுவது கடினம். விதிப் படிதான் அறிவும் வேலை செய்யும்.

264. பசி உள்ளவனுக்கு ருசி தெரியாது. ஆசை உள்ளவனுக்கு நியாயம் தெரியாது. காமவெறி கொண்ட வனுக்கு உறவு முறை கிடையாது. பண ஆசை கொண்டவனுக்கு எதுவுமே கிடையாது.

265. அமைதியாக வாழ வேண்டுமானால் நிறையக் கேட்க வேண்டும். கொஞ்சமாக பேச வேண்டும். (மௌனம் மிக நல்லது) தனிமை அமைதியளிக்கும்.

266. ஒரு மனிதன் வாழ்க்கையில் உயிரை இழக்க லாம், உணர்வை இழக்கலாம், உரிமையை இழக்கலாம், பொருளை இழக்கலாம். ஆனால் கௌரவத்தை மட்டும் இழக்கக் கூடாது.

267. பாம்பாட்டி, யானைப்பாகன், இரவில் தனியா கச் செல்பவன், தடாகத்தில் நீந்தி விளையாடுபவன், தன்னைவிட வலிமை மிக்கவனிடம் பகை கொள்பவன், நடத்தைகெட்ட பெண்களுடன் சகவாசம் வைத்துக் கொள்பவன் இவர்களுக்கு ஆயுள் குறைவு.

268. போருக்குப் போகும்போது எல்லாவிதமான ஆயுதங்களையும் எடுத்துச் செல்ல வேண்டும். தயவு தாட்சண்யம் பார்க்கக்கூடாது. உறவுக்கு அங்கே இட மில்லை. போர்க்களத்தில் சமாதானப் பேச்சுக்கு இட மில்லை. ஒப்பாரி வைக்க நேரமில்லை. வெற்றிதான் முக்கியம்.

269. கௌரவமாக வாழ விரும்புபவர்கள் சாக அஞ்சு வது இல்லை. சாவுக்கு பயந்தவர்கள் கௌரவமாக வாழ முடியாது.

270. அதிக உறவினர், அதிக நண்பர், அதிக பாசம், அதிக ஆசை, அதிகப் பணம் இவை அதிகத் துன்பம் தரும்.

271. பணம் இருந்தால் எல்லோரும் உறவினர் அது இல்லாவிட்டால் யாரும் யாருக்கும் அறிமுகம் இல்லை.

272. வீரனைப் போரிலும், நண்பனை கஷ்ட காலத்திலும், மனைவியை வறுமையிலும், யோக்கியனைக் கடனிலும் அறிந்து கொள்ளலாம்.

273. துன்பங்களைப் பாதி வழியில் சந்திக்க முடியாது. நாம் நினைப்பதைவிட வேகமாக அவை வரும். துன்பங்களைத் தைரியமாக நேரடியாக சந்திப்பது நல்லது. அச்சம் துன்பத்தைப் பெருக்கும்.

274. தேவையான பொருட்கள் நிறைந்த வீடு, பயிர் செய்ய சிறு நிலம். அன்பான, அறிவான மனைவி, சொன்னபடி கேட்கும் பிள்ளைகள் இவை இன்பம் அளிக்கும்.

275. கோவில் இல்லாத ஊர், குழந்தை யில்லாத வீடு, கணவன் இல்லாத மங்கையர், மணம் இல்லாத மலர், நாசி(மூக்கு) யில்லாத முகம், அறிஞர் யில்லாத சபை பயனற்றவை.

276. சூரிய, சந்திர கிரகணத்தின்போது சாப்பிடக்கூடாது. கர்ப்பிணிகள் வெளியில் செல்லாமல் வீட்டில் ஒரு இடத்தில் இருக்க வேண்டும். கிரகணம் முடிந்தவுடன் குளித்து வீட்டைச் சுத்தப்படுத்த வேண்டும் கிரகணங்களை வெறும் கண்ணால் பார்க்கக் கூடாது.

277. நாம் பிறரைவிட அறிவாளிகளாகயிருக்க முயற்சிக்க வேண்டும். ஆனால் அதைப் பிறரிடம் சொல்லக்கூடாது.

278. நமது பலஹீனம் எதிரிகளுக்குத் தெரியக்கூடாது. நமது ரகசியம் மனைவிக்குக் கூடத் தெரியக்கூடாது. நமது பக்தி விளம்பரப்படுத்தக் கூடாது.

279. இருப்பதைக் கொண்டு திருப்தியடைய வேண்டும். இருப்பதை இன்பமாக எண்ணி அனுபவிக்க வேண்டும். இல்லாததற்கு ஏங்கிக் கொண்டிருக்கக் கூடாது. செல்வந்தர்கள் தங்களிடமுள்ளதை தான தர்மமாக ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டும். அப்போது தான் அவர்கள் மதிக்கப்படுவார்கள்.

280. செல்வந்தர் வீட்டு அரண்மனையைவிட ஏழைகளின் குடிசையில்தான் அன்பு அதிகம் யிருக்கிறது. செல்வம் கொடுக்க கொடுக்க குறையும். அன்பு கொடுக்க கொடுக்க வளரும்.

281. நம்மைவிட தாழ்ந்தவர்களுக்கு நாம் செய்யும் சின்னச் சின்ன உதவிகள்தான் நாம் கடவுளுக்கு செய்யும் தொண்டாகும். இரக்கம், நேர்மை, உண்மை, தூய்மை உள்ளவர்களைக் கடவுள் நேசிக்கிறார்.

282. அடக்கம்தான் வாழ்க்கையின் அடிவேர். தாழ்த்தி பிறர் பேசும்போதும் அடக்கம் அவசியம். பிறர் காரணமின்றி புகழ்ந்து பேசும்போதும் அடக்கம் அவசியம். பணிவு உள்ளவன் எப்போதும் நிம்மதியாக வாழ முடியும்.

283. கிழக்கு முகமாக உணவு உண்பவனுக்கு ஆயுள் விருத்தியாகும். தெற்கு முகமாக உணவு உண்பவருக்குச்

செல்வமும், வடக்கு முகமாக உணவு உண்பவர்க்கு சத்யமும் உண்டாகும். சாப்பிடும் போது பேசக்கூடாது. சாப்பிடும்போது உணவைக் குற்றம் குறை சொல்லக்கூடாது. சாப்பிடும்போது கவலையோ, கோபமோ கூடாது.

284. சாப்பிடும்போது பாதியில் எழுந்திருக்கக் கூடாது. இரவில் விளக்கு இல்லாமல் இருட்டில் உணவு உண்ணக்கூடாது. மிதமாக உண்டால் ஆரோக்யம் பெருகும்.

285. உப்பு, அன்னம், தயிர், பால், வெல்லம், நெய், எள்—இவற்றை வீட்டில் வைத்து விற்கக் கூடாது. வறுமை உண்டாகும்.

286. வெள்ளிக்கிழமை கடன் கொடுக்கக் கூடாது. செல்வம் குறையும். ஞாயிற்றுக்கிழமை எண்ணெய் ஸ்நானம் செய்யக்கூடாது. அழகு குறையும். செவ்வாய், சனிக்கிழமைகளில் யாருடனும் சண்டையிடக் கூடாது. பகை வளரும்.

287. எண்ணெய் ஸ்நானம் செய்தவர்கள் வெயிலில் அலையக்கூடாது. குளிர்ந்த பொருளைச் சாப்பிடக் கூடாது. இன்ப கேளிக்கைகளில் ஈடுபடக் கூடாது. பிரயாணம் மேற்கொள்ளக் கூடாது.

288. வியாழக் கிழமையும் அமாவாசையும் கூடிய அன்று அரசமரத்து நிழலில் ஓடும் நீரில் குளித்தால் பிரயாகையில் குளித்த பலன் உண்டாகும்.

289. நதி ஓரம் இருக்கும் புளியமரம், வேப்பமரம், புன்னைமரம் இவைகளின் நிழலில் குளிப்பது கூடாது.

290. விதி நல்லவர்களுக்கு நண்பன், கெட்டவர்களுக்கு விரோதி. அறிவாளிகளுக்கு வழிகாட்டி, மூடர்களின் சர்வாதிகாரி.

291. வயது ஆகிவிட்டாலும் விடாது கல்வி கற்க வேண்டும். இது இந்த ஜன்மத்தில் பலன் கிட்டாவிட்டாலும் மறு ஜன்மத்தில் பயன்படும். இளமையில் கற்காதவன் முதுமையில் கஷ்டப்பட நேரிடும்.

292. கல்வி கற்றவர்கள் கீழ்மக்களானாலும் பிறரால் போற்றப்படுவார்கள். படிக்காதவர்கள் உயர்ந்த குலமாகயிருந்தாலும் தூற்றப்படுவார்கள்.

293. முட்டாள்கள் ஓயாமல் பேசுவார்கள். அதில் உண்மை இருக்காது. அறிவாளிகள் தேவையானதைப் பேசுவார்கள். அதில் உண்மையிருக்கும். பேச்சு நல்லது தான். ஆனால் மௌனம்தான் எதையும் சாதிக்கும்.

294. கெட்டவர்களிடமிருந்து விலகி நிற்பதுதான் நல்லது. ஒருவனை பேச்சிலிருந்தும், நடத்தையிலிருந்தும் அவன் நல்லவனா அல்லது கெட்டவனா என்று அறிந்து கொள்ள முடியும்.

295. எவனொருவன் தன்னிடமுள்ள உணவை பிறர்க்கு பகிர்ந்து கொடுத்து உண்கிறானோ அவனுக்கு நற்கதி கிடைக்கும். வறுமையால் வாடி உதவி கேட்டு வருகிறவர்களுக்கு எவனொருவன் உதவி செய்கிறானோ அவனுக்கு செல்வம் நிலைத்து நிற்கும்.

296. அருட்செல்வம் உள்ளவர்களிடம் பொருட்செல்வம் இருக்காது. பணம் உள்ளவர்களிடம் பண்புயிருக்காது. முரடனிடம் அடக்கம் யிருக்காது. திருடனிடம் நேர்மையிருக்காது. பெண்களிடம் திருப்தி யிருக்காது.

297. அழகும், இளமையும் நிலையில்லாதவை. அறிவாளிகள் இதை ஒதுக்கி, நற்குணத்தையே நம்புவார்கள். அறிவிலிகள் சொல்லும் தகாத வார்த்தைகளை கண்டு அறிவாளிகள் கலங்க மாட்டார்கள்.

298. அன்புடைய உறவினர்களின் தொடர்பு மகிழ்ச்சியளிக்கும். சொன்னபடி கேட்கும் மனைவி மகிழ்ச்சியளிப்பாள். தொடர்ந்து வரும் பணம் மகிழ்ச்சியளிக்கும். கஷ்ட காலத்தில் நம்மை விட்டுப் பிரியாத நண்பர்கள் மகிழ்ச்சியை அளிப்பார்கள்.

299. இந்த வாழ்வில் சந்தோஷமாகயிருப்பது கஷ்டம். கடவுளை சரண் அடைவதுதான் நிம்மதிக்கு வழிவகுக்கும். இருப்பதைக் கொண்டு திருப்தியடைய வேண்டும். பிறர் நல்வாழ்வைக் கண்டு பொறாமைப் படக்கூடாது. யாரிடமும் கோபம் கொள்ளக்கூடாது. யாருக்கும் வாக்கு கொடுக்கக் கூடாது. யாருடைய உதவியையும் எதிர்பார்த்து வாழக்கூடாது.

300. சுயமுயற்சியால் உழைத்து வாழ்கிறவர்களை யாரும் எதுவும் செய்ய முடியாது.

301. ஒரு மனிதனுக்குத் தேவையானது— நன்றியுள்ள இதயம், தீவிரமாகச் சிந்தித்து செயல்படும் மனம், புன்னகை முகம், இனிய வார்த்தைகள், பிறர்க்கு உதவும் குணம், துணிவான செயல்.

302. அறிவாளிகளின் கோபம் தானாகத் தணிந்துவிடும். ஆனால் மூடர்களின் கோபாவேசம் ஆறாது. அது வளர்ந்து கொண்டேயிருக்கும்.

303. நல்லவர்களின் நட்பு நன்மையளிக்கும். ஆனால் தீயவர்கள் நட்பு உயிர்க்கே உலை வைக்கும்.

304. அடக்கம், பொறுமை, அசூயை இல்லாமை, பெரியோர்களை மதித்தல், தைரியம், நல்ல எண்ணம் இவை ஆயுளை வளர்க்கும்.

305. வாழ்க்கைக்கு நம்பிக்கை மிக அவசியம். அனுபவம் ஒரு நம்பிக்கையான விளக்கு. இதன் துணை கொண்டு வழி நடக்கலாம்.

306. சுற்றத்தாரையோ, இளமையையோ, செல்வத்தைக் கண்டோ பெருமையடையக் கூடாது. இவை ஒரு நிமிஷத்தில் ஒழிந்து விடும்.

307. வடதிசையில் தலைவைத்துப் படுத்தால் உடல்நலம் கெடும். வடக்கு நோக்கி உண்பவர்க்கு நோய் வளரும்.

308. உண்மையற்றதைச் சொல்வதைவிட மௌனம் சிறந்தது. அவதூறு பேசி வாழ்வதைவிட மரணம் மேல். பிறர் பொருளில் இன்பம் அடைவதைவிட யாசகம் மேல். இழிவானவர்களிடம் யாசகம் பெறுவதைவிட சாவது மேல். அன்புடன் உணவு அளிக்காதவர் வீட்டில் உண்பதைவிட பட்டினி மேல். முயல் வேட்டையாடுவதைவிட யானை வேட்டையாடி தோற்பது மேல். பண்பற்ற பெண்களுடன் வாழ்வதைவிட துறவறம் மேல். பகைவரோடு நட்பாகயிருப்பதைவிட பாம்போடு பழகுவது நல்லது. வஞ்சகர்களுடன் கூடி வாழ்வதைவிட தனிமை வாழ்வு சிறந்தது.

309. கொடுத்த வாக்குறுதியை எப்பாடு பட்டேனும் நிறைவேற்ற வேண்டும். முதலில் யாருக்கும் எதற்கும் வாக்கு கொடுக்காமல் இருப்பது மிக நல்லது.

*310.* நிம்மதியாக யிருக்க வேண்டுமென்றால் கண்டதையும் கேட்டதையும் பிறரிடம் சொல்லக் கூடாது. தனிப்பட்ட ரகசியம் எதையும் கேட்டுத் தெரிந்து கொள்ளக் கூடாது. நாம் செய்யும் வேலையை பிறரிடம் ஒப்படைக்கக்கூடாது. பிறர் செய்யும் வேலையில் குற்றம் குறைகளை குத்திக் காட்டக் கூடாது.

*311.* பெண்கள் அலங்காரம் செய்து கொண்டு பூ வைத்துக் கொண்டு பகல் 12 மணிக்கோ, இரவு அகால நேரத்திலோ தனியாகப் போகக் கூடாது. கெட்ட ஆவிகள் பற்றிக் கொள்ளும்.

*312.* வயதில் குறைந்த ஜோதிடரிடம் ஜோஸ்யம் கேட்க வேண்டும். வயது முதிர்ந்த வைத்தியரிடம் நோயைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். நம்மை விட மேலானவரிடம் தகுந்த அறிவுரை பெறவேண்டும்.

*313.* பணம் சம்பாதிப்பது பிறர்க்கு உரிய சமயங்களில் உதவுவதற்காகவே. தானும் அனுபவிக்காமல், பிறர்க்கும் கொடுக்காமல் இருப்பவன் நரகத்திற்குத்தான் போவான்.

*314.* அதிகமான துக்கம் பேசாது. அதிகமான சந்தோஷமும் பேசாது. குறைந்த துக்கம் உள்ளவன் புலம்பிக் கொண்டிருப்பான். நல்ல அறிவாளிகள் துக்கத்தையோ, சந்தோஷத்தையோ பெரிதுபடுத்துவதில்லை. இரண்டும் அவர்களுக்கு ஒன்றுதான்.

*315.* பெண்கள் விவாகம் ஆனவுடன் கணவன் சொற்படி கேட்க வேண்டும். கணவன் அனுமதியின்றி பிறந்த வீட்டிற்கு போகக்கூடாது. விரதம் எதையும் அனுமதி

யின்றி அனுஷ்டிக்கக் கூடாது. பிற ஆடவர்களுடன் அவசியமின்றி பேசக்கூடாது. அவர்கள் கொடுக்கும் எதையும் வாங்கக்கூடாது. எதையும் மறைக்கக்கூடாது. பேச்சும் செய்கையும் ஒன்றாக யிருக்க வேண்டும். காரணம் இன்றி சிரிக்கக்கூடாது, அழக்கூடாது.

*316.* உழைப்பு, உற்சாகம் இவைதான் ஒருவனுடைய நிலையான சொத்தாகும். மற்றவை எல்லாம் அழியக்கூடியது. உழைப்பு உயர்வைத் தரும். கவலையைப் போக்கும். நம்பிக்கையை உருவாக்கும். தீய எண்ணங்களை விரட்டும். நாம் வேண்டுவதைக் கிடைக்க வழிவகுக்கும்.

*317.* கடுமையான வெய்யில், சுடுகாட்டுப் புகை, தன்னைவிட முதிர்ந்த பெண்ணுடன் உறவாடல், குட்டை நீர், தீய செய்கைகள், இரவில் தயிர் அன்னம் மற்றும் நெல்லிக்காய் ஊறுகாய் சாப்பிடுதல், அலட்சியப்படுத்தப்படும் வியாதி, பெரியோர்களை அவமதிப்பது, கற்புள்ள மனைவியை ஏசுவது; தெய்வ நிந்தனை இவை ஆயுளைக் குறைக்கும்.

*318.* கடவுளைத் தொழ நேரம் வேண்டியதில்லை, எந்த நேரமும் எந்த இடத்திலும் பிரார்த்தனை செய்யலாம். மொழி அவசியமில்லை. உண்மையான பக்தி தான் முக்கியம். வெளி வேஷம் தேவையில்லை.

*319.* கஷ்டப்பட்டு சம்பாதித்த பணம் தேவையில்லாததற்கு செலவழிக்கக்கூடாது. சேமிப்பு மிக முக்கியம். சிக்கனமும் ஒரு வருமானம்தான். ஆடம்பரச் செலவு அழிவைத் தரும்.

**320.** சந்தோஷம் வெளியில் இல்லை. நாம் இருக்கும் இடத்திலேயே இருக்கிறது. உள்ளத் திருப்தி, சின்னச் சின்ன உதவி, பிறரிடம்ம் அன்பு, மிதமான பேச்சு, பிறர்க்கு தொல்லையில்லாமல் இருத்தல், கடன் வாங் காமை, இவையே சந்தோஷமாகும்.

**321.** உலகில் உயர்ந்தவர் யார்? நம்மை பெற்ற தாய். உயர்ந்த ஆசிரியர்? தந்தை. உண்மை? நாம் இவ்வுலகில் அதிகநாள் இருக்க முடியாது என்பதுதான். நன்றி? நாயின் வாலில் ஒட்டிக் கொண்டிருக்கிறது. பாசம், நேசம்? பணத்தை நம்பி வாழ்ந்து கொண்டிருக்கிறது. பணம் உள்ளவனுக்கு பல உறவினர். ஏழைக்குக் கடவுளைத் தவிர யாருமில்லை.

**322.** இரவில் மரங்களுக்கு அடியில் தூங்கலாகாது. பாழடைந்த இடங்களில் தங்கக் கூடாது. முன்பின் தெரியாதவர் இருப்பிடங்களுக்குப் போகக் கூடாது. பூட்டியிருக்கும் வீட்டிற்குள் எட்டிப் பார்க்கக் கூடாது. அறிமுகம் யில்லாதவர்களிடத்தில் எதையும் சொல்லக் கூடாது.

**323.** பேச வேண்டியிருந்தால் மட்டும் பேச வேண் டும். தேவையானதை மட்டும் பேசவேண்டும். உண்மை யையே பேசவேண்டும். உண்மை நன்மை அளிப்பதாக யிருந்தால்தான் பேசவேண்டும்.

**324.** திருமணம் செய்யும்போது, சகோதர சகோதரியு டன் பிறந்த பெண்ணையே தேர்ந்தெடுக்க வேண்டும். ஒரே ஒருத்தியாக பிறந்த பெண்ணை மணந்தால் வாழ்க்கை கஷ்டமாகயிருக்கும். விட்டுக்கொடுக்கும் மனோபாவம் இருக்காது. செல்லமாக வளர்க்கப்பட்ட

அவள் பிடிவாதமாக யிருப்பாள். ஆனால் போகப்போக

தன் குடும்பம், தன் மக்கள் என்று சகஜ நிலைக்கு வந்து விடுவாள். திருமணமான புதிதில்தான் இருவருக்கும் கொஞ்சம் கஷ்டமாக இருக்கும்.

325. பெண்களின் அழகைவிட குணத்திற்குத்தான் மதிப்பு கொடுக்க வேண்டும். அதிகமாக காரணமின்றி சிரிக்கும் பெண், எப்போதும் கோபத்தோடும், அழுது கொண்டும் இருக்கும் பெண் உதவாது. பூமி அதிர நடப்பவள், கட்டைவிரல் பதியாமல் நடப்பவள் குடும்பத்திற்கு ஆகாது. ஜாதகம் பார்த்து, குலம், கோத்திரம் பார்த்து திருமணம் செய்ய வேண்டும்.

326. திருமணம் வீட்டில்தான் செய்ய வேண்டும். சத்திரத்தில் செய்யக்கூடாது. விவாகம் செய்விக்கும் வைதீகர்களுக்கு தக்ஷிணை சரியாக கொடுக்க வேண்டும். வீண் ஆடம்பரம் கூடாது. எல்லோருக்கும் மரியாதை செய்ய வேண்டும். திருமண வீட்டிற்கு வரும் பெரியோர்களை அலட்சியப் படுத்தக்கூடாது.

327. திருமணமான பெண் பிறந்த வீட்டுப் பெருமையை புகுந்த வீட்டில் சொல்லி ஜம்பமடிக்கக் கூடாது. எல்லோருடனும் அன்புடன் பேசிப் பழக வேண்டும். பிறந்த வீட்டிற்குப் பெருமையைத் தேடித் தரும் வகையில் நடந்து கொள்ள வேண்டும்.

328. கல்யாணத்திற்குப் பலமுறை அழைத்தால்தான் போக வேண்டும். ஆனால் துக்க சமாச்சாரங்களுக்கு உடனே போகவேண்டும். ஏழை வீட்டிற்கு அடிக்கடி போகவேண்டும். பணக்காரர் வீடுகளுக்கு அழைப்பு இல்லாமல் போகக்கூடாது.

329. உழைப்பவர்களுக்கு அவர்கள் வியர்வை உலர்வதற்கு முன் உரிய கூலியை கொடுத்துவிட வேண்டும்.

330. ஒருவர் நோயுற்றுயிருந்தால் அவருக்கு தேவை யான உதவிகளைச் செய்ய வேண்டும்.

331. பணத்தை இழந்தால் மறுபடி சம்பாதித்துக் கொள்ளலாம். ஆனால் ஒழுக்கத்தை இழந்தால் மீண்டும் பெற முடியாது.

332. நாம் செய்த புண்ணியம் (தர்மம்); பாபம் இவை நிழல் போல பின் தொடர்ந்து வரும். இவைகள் இறந்த பிறகும் தொடர்ந்து வரும். தேடி வைத்த செல்வம், வீடு, சுற்றத்தார் யாரும் கூட வரமாட்டார்கள்.

333. ஒரு அழகான பெண் இன்னொரு அழகான பெண்ணை விரும்பமாட்டாள். ஒரு வைத்தியன் இன் னொரு வைத்தியனை விரும்பமாட்டான். ஒரு ஜோதி டன் இன்னொரு ஜோதிடனை விரும்ப மாட்டான். முட்டாள் யாரையும் விரும்ப மாட்டான்.

334. முட்டாள்களிடம் எந்த ரகசியத்தையும் சொல் லக்கூடாது. முட்டாள்களுடன் பயணம் போகக்கூடாது. அவர்களுக்கு அறிவுரையும் கூறக் கூடாது. அவர்களை அவர்களுடைய போக்கில் விட்டு விடவேண்டும்.

335. ஒருவர் நிம்மதியாக வாழவேண்டுமென்றால் உணவைக் கட்டுப்படுத்த வேண்டும். நாவை அடக்க வேண்டும். பேச்சில் இனிமை யிருக்க வேண்டும். உண்மையை உணர்ந்து செயல்பட வேண்டும். உழைத்து சம்பாதித்த பணத்தை சேமிக்க வேண்டும். கடன் கொடுக்கவோ, வாங்கவோ கூடாது.

336. எந்த நேரமும் கடவுளை நாமாவளி செய்து வழிபட வேண்டும். கடவுள் அருள் இல்லாமல் ஒருநாள்

கூட இருக்க முடியாது. அவர் இஷ்டப்பட்டதுதான் நமக்குக் கிடைக்கும்.

**337.** தன்னுடன் பிறந்தவர்களிடத்தில் அதிகாரத்தைக் காட்டலாகாது. பிறரைக் கவரக்கூடிய அன்பை தீயவரிடத்தில் வைக்கக்கூடாது. பெண்களிடத்தில் அளவுக்கு அதிகமான நம்பிக்கை வைக்கக் கூடாது.

**338.** கள் குடித்தல், சூதாடல், பெண் சகவாசம், திருடுதல் இவை துன்பம் பயக்கும். இவைகளை விலக்க வேண்டும்.

**339.** செய்யக்கூடாத காரியத்தில் அறிவைச் செலுத்தக் கூடாது. கிடைக்காத வஸ்துவுக்கு ஆசைப்படக்கூடாது. உடனடியாக செய்ய வேண்டியதை ஒத்தி வைக்கக்கூடாது. யாரையும் நம்பி நம்மால் முடியாத விஷயத்தில் இறங்கக் கூடாது.

**340.** விருந்தினர், பெண்கள், குழந்தைகள் பெரியோர் இவர்களுக்கு அன்னம் கொடாமல் தான் மட்டும் சாப்பிடக்கூடாது. சாப்பிடும்போது கோபம், துக்கம் இவற்றிற்கு இடம் கொடுக்கக் கூடாது. நன்கு ஜீரணம் ஆகக் கூடியதையே சாப்பிட வேண்டும். பசியில்லாமல் சாப்பிடக் கூடாது. பகலில் அதிகமாகவும், இரவில் கொஞ்சமாகவும் சாப்பிட வேண்டும்.

**341.** சமமான படுக்கையில் படுக்க வேண்டும். கோப தாபங்களை படுக்கைக்குக் கொண்டு போகக் கூடாது. தூக்கம் வருவதற்காக ஏதும் செய்யக் கூடாது. அது இயற்கையாக வரவேண்டும்.

**342.** பிறர் இல்லத்தில் வாழ்வதை விட காட்டில் வாழ்வது சிறந்தது. அன்பில்லாதவர் அளிக்கும் விருந்

தைவிட அன்புடையோர் அளிக்கும் எளிய உணவு சிறந்தது.

343. கல்வி, வீரம், திறமை, வலிமை, அஞ்சாமை இவை இயற்கையாக உடையவன் வாழ்வில் வெற்றி பெறுவான்.

344. அறிவு என்பது ஆறு போன்றது. அது எவ்வள வுக்கு எவ்வளவு ஆழமாக யிருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு சந்தடியின்றி அமைதியாக இருக்கும்.

345. பெண்கள் விரித்த கூந்தலுடன் தெரு வாயில்படி யைத் தாண்டக்கூடாது. பிறர் வீட்டிற்கு சென்று வம்பு பேசக்கூடாது. பழக்கம் இல்லாதவர்களுடன் பயணம் போகக்கூடாது.

346. பாம்போடு எவ்வளவு பழகினாலும் அது கடிக் கும். தீயவர்கள் எவ்வளவு நட்பாகயிருந்தாலும் தீங்கு விளைவிப்பார்கள். நல்லவர்கள் நட்பு நாளாக நாளாக வளரும். தீயவர் நட்பு நாளுக்கு நாள் தளரும்.

347. பணக்காரர்களுக்கு சட்டம் வளைந்து கொடுக் கும். ஆனால் அதன் வலையில் ஏழைகள் சிக்கிக் கொள்வார்கள். இல்லாதவனுக்கு எதுவும் இல்லை. இருப்பவனுக்கே எல்லாம் சொந்தம். ஆனால் இது எல்லாக் காலங்களிலும் இப்படியே தொடர்வதில்லை. நியாயம் வெல்லும்.

348. வாழ்க்கையில் கற்பனைக்கு இடம் கொடுக்கக் கூடாது. நடைமுறைதான் சாத்தியம். இன்பமும் துன்ப மும் மாறி மாறி வரும். இன்பம் வரும்போது துள்ளிக் குதிக்காமலும், துன்பம் வரும்போது துவளாமலும் இருக்க வேண்டும்.

349. தோல்வி வெற்றியின் படிக்கட்டாகும். தோல்விகள் நம்மைத் திருத்திக் கொள்ள உதவும். தோல்விகள் மனதைப் பலப்படுத்தும். தோல்விகளைக் கண்டு அஞ்சக்கூடாது. எதையும் எப்போதும் சந்திக்கத் தயாராக இருக்க வேண்டும்.

350. கவலைகள்—வேண்டாத விருந்தாளிகள், அவர்களை வரவேற்கக் கூடாது. இருக்க இடம் கொடுக்கக் கூடாது. அவர்களுடன் அதிக நேரம் உறவாடக்கூடாது.

351. ஆபத்து சமயத்தில் நமக்கு யார் உதவி செய்கிறார்களோ, அவர்கள் நமக்கு உறவினர்கள். நமக்கு அறிவுரை கூறி நல்வழிப்படுத்துபவர்கள் நண்பர்கள். கஷ்டகாலத்தில் ஆறுதல்கூறி உடன் இருப்பவளே மனைவி. நம் சொற்படி கேட்டு நடப்பவர்கள் நம் குழந்தைகளாகும்.

352. பிற உயிர்களுக்கு இம்சை செய்யாதுயிருப்பது தவம். பிறர் துன்பங்களில் பங்கு ஏற்பது தொண்டு. தியாகம் செய்வதுதான் வாழ்க்கை. பிறர்க்கு நன்மை செய்வதுதான் வாழ்க்கை. வாழ்க்கையில் சுயநலம் அதிகமிருந்தால் மிருகத்திற்கும் மனிதனுக்கும் வித்தியாசம் எதுவுமிருக்காது.

353. கையில் காசில்லாமல் பயணம் போகக் கூடாது. நல்ல துணையில்லாமல் நெடுந்தூரம் போகக் கூடாது. இரவில் எங்கும் தங்கக் கூடாது. கையில் காசும் நெஞ்சில் தைரியமும் இருந்தால் எங்கும் போகலாம். அது இல்லாதவர்களுக்கு வீடுதான் சொர்க்கம்.

354. பெண்களை பிற ஆடவர்களுடன் சகஜமாகப் பழக அனுமதிக்கக் கூடாது. பெண்களை கொடுமைப்ப டுத்தி அழவிடக்கூடாது. எங்கு பெண்களுக்கு மரியாதை கொடுக்கப்படுகிறதோ அங்கு திருமகள் தங்குவாள். பெண்கள் சந்தோஷமாகயிருந்தால் அந்த வீட்டில் செல் வம் பெருகும்.

355. பகலில் உறக்கம் கூடாது. இரவில் விழித்துக் கொண்டிருக்கக் கூடாது. நடு இரவில் தனியாக எங்கும் போகக் கூடாது. சந்தியா வேளையில் சாப்பிடக் கூடாது. இரவில் அகால வேளையில் குளிக்கக் கூடாது.

356: பாம்புக்கு அருகிலும், யானையின் எதிரிலும், பெண்கள் இருக்கும் இடத்துக்கு அருகிலும், துஷ்டர்கள் எதிரிலும் அதிக நேரம் யிருக்கக் கூடாது. அயலார் பெண்களிடம் அதிக நேரம் பேசிக் கொண்டிருந்தால் மன உறுதி தளரும் அவர்களால் கெடுதி ஏற்படும்.

357. பிறருடைய நற்குணங்களையே பாராட்ட வேண்டும். குற்றங்குறைகளைச் சொல்லி யாரையும் மனவருத்தப்பட வைக்கக் கூடாது. யாரையும் அலட்சி யம் செய்யக்கூடாது. யாரையும் அவமதிக்கக் கூடாது.

358. ஒரு தீயவன் நல்லவனுடன் இருந்தால் அவ னைக் கெடுத்துவிடுவான். ஒரு பெண் கெட்டவளாக யிருந்தால் பல பெண்களை கெடுத்து விடுவாள். எனவே நல்லவர்களுடனேயே பழக வேண்டும். நல்லவர்களின் பேச்சையே கேட்க வேண்டும். அவர்களின் அறிவுரை களை ஏற்க வேண்டும். தீயவர்களை ஒதுக்க வேண்டும். ஏனெனில் ஒரு குடம் பாலை ஒரு துளி விஷமே

கெடுத்துவிடும் அபாயம் உண்டல்லவா? பொறுமையிருக்கும் இடத்தில், நிதானம் இருக்கும் இடத்தில், திறமை, தைரியம், முன்யோசனை போன்றவை இருக்கும் இடத்தில் வெற்றி நிச்சயம் இருக்கும்.

359. வெற்றி, முயற்சியுள்ளவனுக்கு விரைவில் கிடைக்கும். வெற்றி தேடிப்போய் கிடைப்பதல்ல — கடவுள் அருள் இருந்தால் எல்லாம் கிடைக்கும். உண்மை பக்தி உள்ளவனுக்குத்தான் கடவுள் அருள் கிடைக்கும். வெளிவேஷம் போடுபவன் கடைசியில் ஏமாறுவான்.

360. ஒருவனுக்கு நற்குணங்கள் பழக்க வழக்கங்களாலும் சேர்க்கையினாலும் ஏற்படும். பிறப்பாலோ, பரம்பரை பெருமையினாலோ ஒரு சிலருக்கே நற்குணங்கள் அமைய வாய்ப்பிருக்கிறது. தன்னை அடிக்கடி திருத்திக் கொள்பவன்தான் வாழ்வில் முன்னேறுவான்.

361. நாம் பிறரை ஏமாற்றினால் நம்மை பிறரும் ஏமாற்றுவர். நாம் பிறர்க்கு கேடு நினைத்தால் அது நமக்கே வரும். நல்லது நினைத்து, நல்லது செய்தால் நன்மையே ஏற்படும்.

362. கேட்பவர்களுக்குத்தான் அறிவுரை கூற வேண்டும். முட்டாள்களுக்கும், பொல்லாதவர்களுக்கும் சொல்லக் கூடாது. அப்படிச் செய்தால் புத்தி சொன்னவர்களுக்கு ஆபத்து உண்டாகும்.

363. நல்லவர்கள் நல்ல பேச்சைக் கேட்டுத் திருந்துவார்கள். தீயவர்கள் திருந்தமாட்டார்கள். நாய்வாலை நிமிர்த்த யாரால் முடியும்?

364. நல்லயோசனை கூறும் தன்மை நற்குலத்தில் பிறந்து நல்ல கல்வி கற்றவர்களுக்கே இருக்கும். நல்லகு லமோ, கல்வியோ இல்லாதவர்களுக்கு அந்தத் தகுதியி ருக்காது.

365. விதியை வெல்ல யாராலும் முடியாது. கடவு ளைப் பிரார்த்தித்து அவரையே நம்பினால் விதியின் கொடுமை குறையும். விதிப்படி தான் அறிவும் வேலை செய்யும்.

366. அறிவற்ற பலசாலியை அறிவுள்ள பலகீனமான வன் வெல்ல முடியும். திறமையுள்ளவனை அது இல்லாதவன் சூழ்ச்சியினால் வெல்ல முடியும். அறிவும் திறமையும் உள்ள ஒருவனை பலர் ஒன்று சேர்ந்தாலும் வெல்ல இயலாது.

367. ஒவ்வொருவனும் சுயமாக உழைத்தால் தான் முன்னேற முடியும். பிறர் உதவியாலோ தூண்டுத லாலோ முழுமையாக முன்னேற முடியாது. தகுதிக்கும், நடத்தைக்கும் ஏற்ப எவரும் முன்னேறலாம்.

368. பிறரின் எண்ணங்களை முகம், கண்கள் மூலம் ஊகித்து அறியலாம். முகத்தோற்றம், அங்க அமைப்பு, நடை, பேச்சு, சைகை, கண்கள், முகம் இவற்றில் ஏற்படும் மாற்றங்கள் ஒருவன் உள்ளத்தில் உள்ள எண்ணங்களை அறிய உதவும்.

369. பலசாலிக்கு பாரம் என்று ஒன்றுமில்லை. ஊக் கம் உடையவனுக்குத் தூரம் என்று ஒன்றும் இல்லை, கல்வி கற்றவர்களுக்கு அன்னிய நாடு என்று ஒன்று மில்லை. பழகத் தெரிந்தவனுக்கு அறிமுகமாகாதவன் என்று யாரும் இல்லை.

370. கொடுமையான சொற்கள், காலத்துக்கு ஒத்து வராத செயல்கள், நயவஞ்சகமான நண்பர்கள், மாறு பட்ட குணமுடைய மனைவி, பிறர்வசம் உள்ள பணம் இவை நமக்கு தீமையை உண்டாக்கும்.

371. மன அமைதிபெற ஆசையை அடக்க வேண்டும். மனதை நல்வழியில் செலுத்த வேண்டும். புகழுக்கும் பணத்திற்கும் அடிமையாகக் கூடாது. தெய்வ சிந்தனையில் மனதை ஈடுபடுத்த வேண்டும்.

372. உண்மை கசக்கும், பொய் இனிமையாக இருக்கும். உண்மை நம்ப முடியாதபடி யிருக்கும். பொய் நம்பும்படி யிருக்கும். நன்கு ஆராய்ந்து உண்மையைக் கண்டறிய வேண்டும். பொய் நிலைத்து நிற்காது. உண்மை நிலையானது.

373. பிறர் விவகாரங்களில் அநாவசியமாக தலையிடக்கூடாது. பிறர் பேசிக் கொண்டிருக்கும்போது நடுவில் குறுக்கிடக் கூடாது, பிறர் ரகசியங்களை அறிய முயலக் கூடாது.

374. வேலைக்காரர்களையும், விலை உயர்ந்த ஆபரணங்களையும் வைக்க வேண்டிய இடத்தில் வைக்க வேண்டும். தங்க நகையை காலில் அணியக் கூடாது. வேலைக்காரர்களிடம் நம் ரகசியங்களைச் சொல்லக் கூடாது.

375. எதிரிகளை அடக்க முதலில் சமாதானப் பேச்சு தொடங்க வேண்டும். அது பயன் அளிக்கவில்லை என்றால் நம் பலத்தைக் காட்ட வேண்டும். நமது தைரியம் நமக்கு வழிகாட்டி. நமது அறிவு நமது சொத்தாகும். வெற்றிதான் நம் குறிக்கோளாகும்.

376. கயவனுக்கு நன்மை செய்யக்கூடாது. அறிவிலிகளுக்கு அறிவுரை செய்வது, தகுதியற்றவர்களுக்குத் தானம் செய்வது, சோம்பேறிகளுக்கு பொருள் கொடுப்பது, நன்றி கெட்டவர்களுக்கு உதவுவது, பிணத்துக்கு அலங்காரம் செய்வது எல்லாம் வீண்.

377. தாழ்ந்த காலத்திலும் அறிவுள்ளவர்கள் தாழ்ந்தவர்களிடம் யாசிப்பதில்லை. சுய கௌரவத்தை விட்டுக் கொடுப்பதில்லை. செய்யத் தகாத காரியங்களைச் செய்வதில்லை.

378. தியானம், பக்தி, ஜபம் முதலிய நல்ல ஒழுக்கங்களைக் கொண்டு ஒருவன் தன் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்யும்போது ஆசைகளை எல்லாம் விட்டுவிட வேண்டும்.

379. பக்தி மார்க்கத்தில் முன்னேற விரும்புபவன் பண ஆசை பெண் ஆசைகளை விட்டுவிட வேண்டும். யார் எதைக் கொடுத்தாலும் வாங்கிச் சாப்பிடக் கூடாது. தீயவர்கள், ஒழுக்கம் இல்லாதவர்கள், புரோகிதத் தொழில் செய்பவர்கள் இவர்களிடமிருந்து எதையும் வாங்கக் கூடாது.

380. நாம் கஷ்டப்பட்டு சம்பாதித்தது நமது செல்வமாகும். நம்மிடம் இருப்பது எல்லாம் கடவுளுக்குச் சொந்தமானது. நாம் நம்முடையது என்று கர்வப்படக்கூடாது. வீண் கர்வம் அழிவைத் தரும்.

381. உண்மையான வரவிற்கும் உண்மையான செலவிற்கும் வேறுபாடு தெரியாதவர்கள் தாங்கள் பெற்றுள்ள அனைத்தையும் இழந்து விடுவார்கள்.

382. இளமையில் நாம் நினைத்தது நிஜ வாழ்வில் நடைபெறாமலும் போகலாம். நாம் கற்பனை செய்த தற்கு எதிராக எல்லாம் நடைபெறலாம். ஆகவே இன்பத்தையும் துன்பத்தையும் தாங்கும் மனப்பக்கு வத்தை அடைய வேண்டும்.

383. பண ஆசையும், பெண் ஆசையும், மண்ணாசை யும் ஒரு மனிதனைக் கட்டுப்படுத்துகிறது. அவனுடைய சுதந்திரத்தைப் பறித்து விடுகிறது. இதிலிருந்து மீள பகவானை சரண் அடைய வேண்டும். கொஞ்சம், கொஞ்சமாக உலகப்பற்றைத் தவிர்க்க வேண்டும்.

384. எங்கிருந்தாலும் கடவுளை நினைத்து பிரார்த் தனை செய்ய பழகிக் கொள்ள வேண்டும். ஞான வாழ்க்கைக்குத் தகுதியான சூழ்நிலையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். உள்ளம் உயர ஞானம் உயரும். வாழ்வில் சர்வ ஜாக்கிரதையுடன் எந்த ஆசையும் வளராதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

385. பக்தியில்லாதவர்கள், தூய்மை இல்லாதவர்கள், கொடியவர்கள் — இவர்கள் தொடர்பை ஒருவன் வைத்துக் கொள்ளக் கூடாது. உண்மை பக்தி உள்ளவர்க ளுக்கு உதவி புரிய வேண்டும்.

386. ஆலயங்களுக்குச் செல்லும்போது தெய்வ நம் பிக்கையுடன் தூய வஸ்திரம் அணிந்து பழம், பூ, கற்பூரம் இவைகளை எடுத்துச் செல்ல வேண்டும். சந்நிதி கதவுகள் போட்டிருந்தாலும் திரை போட்டிருந்தாலும் உள்ளே செல்லக் கூடாது. ஸ்நானம் செய்யாமல் கோவில்களுக்குப் போகக் கூடாது. தாம்பூலம் போட்டுக் கொண்டு போகக்கூடாது.

387. புஷ்பம், பழம் இவைகளைத் தண்ணீரில் அலம்பி எடுத்துச் செல்ல வேண்டும். பழைய துணி, காகிதம், துர்நாற்றமுடைய இலைகளில் புஷ்பத்தை வைத்து எடுத்துச் செல்லக்கூடாது.

388. கோவில் வாசல், துவஜஸ்தம்பம், துவார பாலகர் ஆகிய இடங்களில் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். நமஸ்காரம் செய்யும்போது பின்புறம் சந்நிதி, பெரியோர்கள் இல்லாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

389. ஸந்நிதியில் சத்தம் போடுவது, வம்பு பேசுவது, அழுவது, திட்டுவது, படுப்பது, தூங்குவது கூடாது. சந்நிதியில் பிரசாதம் பெற்றுக் கொண்டு, தெரிந்த ஸ்லோகங்களை சொல்லிக் கொண்டு பிரதட்சணம் செய்ய வேண்டும்.

390. உற்றார், உறவினர், அறிமுகமானவர் என்ற நிலையில் உள்ள மனிதர்களின் பலத்தை நம்புவதைவிட கடவுளை நம்புவது நல்லது. மனிதர்களின் பின்னால் அலைவதைவிட கடவுள் அருளில் நம்பிக்கை வைப்பது மிக நல்லது. உண்மை பிரார்த்தனை ஒருநாளும் வீண் போகாது.

391. கடுமையான வார்த்தையில்தான் உண்மையிருக்கும். இனிமையான வார்த்தையில் ப்சப்பும் பொய்யும் கலந்து யிருக்கும். உண்மை எப்போதும் காதுக்கு இனிமையாயிருக்காது. நன்றி, விசுவாசம், பக்தி, அன்பு முதலியவை நல்ல குலத்தில் பிறந்தவர்களிடம் எப்போதும் யிருக்கும். நல்ல குலத்தில் பிறக்காதவர்களிடம் பொய், பித்தலாட்டம், ஏமாற்று வேலை அதிகமிருக்கும்.

392. சாப்பிடக்கூடாத உணவை எப்போதும் சாப்பிடக்கூடாது. அன்பு இல்லாதவர் அளிக்கும் விருந்தை ஏற்கக்கூடாது. உண்ணும் அன்னத்தைத் துவேசிக்கக் கூடாது. பகவானுக்கு நிவேதிக்காத உணவை உண்ணக் கூடாது. விலக்கப்பட்ட உணவு உட்கொண்டால் நோய் வரும், ஆயுள் குறையும்.

393. உலகில் உள்ள எல்லா உயிர்களுக்கும் தந்தையாக யிருப்பவர் கடவுள். அவரே எல்லா உயிர்களையும் பரிபாலிக்கிறார். கடவுள் பொறுப்பில் எல்லாவற்றையும் ஒப்படைத்துவிட்டு நம் கடமையை ஒழுங்காகச் செய்ய வேண்டும். பலனை எதிர்பார்த்து கடமைன்யச் செய்யக்கூடாது.

394. உலகப்பற்று உள்ளவர்கள் உபயோகமற்ற பொருட்களைத் தேடி அலைவார்கள். உலகப் பற்று அற்றவர்கள் பகவானை நம்பி அவரையே பிரார்த்திப்பார்கள், கடவுளை நம்புவார்கள். எந்த காலத்திலும் கஷ்டப்பட மாட்டார்கள்.

395. அறிவிலார்க்குச் செய்யும் உபதேசம் சினத்தை வளர்க்கும். அடக்கத்தை உண்டாக்காது. பாம்புக்குப் பால் வார்த்தால் விஷத்தைக் கக்குமே தவிர அமிருதத்தை உண்டாக்காது.

396. நம்மைவிட ஆற்றல் நிறைந்தவனை வணங்கி ஒழுகுவோரது செல்வமும், உரிய காலம் நோக்கி பராக்கிரமம் மேற்கொள்வோரது செல்வமும் நீங்காமல் இருக்கும்.

397. நிதானம், பொறுமை இவைகளைக் கடைப்பிடிக்கும்போது விரோதிகள் நம்மைத் துன்புறுத்தினாலும்

கோபத்தைக் காட்டாமல் அமைதியாக யிருக்க வேண்டும். கோபம் பலகீனத்தை உருவாக்கும். சூழ்நிலை ஒத்து வரும்போது முழு பலத்துடன் விரோதியை எதிர்க்க வேண்டும். அவனது தவற்றை உணரச் செய்ய வேண்டும்.

*398.* அமைதி வேண்டுமானால் பார், கேள், ஆனால் மௌனமாகயிரு.

*399.* நல்லது நினைத்து நல்லது செய்தால் நன்மை பிறக்கும். தீயதை நினைத்து கெட்டதைச் செய்தால் கேடுகாலம் பிறக்கும்.

*400.* முன் பின் தெரியாதவர்களை நம்பி அவர்களுடன் பயணம் போகக்கூடாது. வழியில் நமக்கு ஆபத்து உண்டாக்கும். பழக்கமானவர்களுடன் வசதியிருந்தால் மட்டுமே வெளிப் பயணம் மேற்கொள்ள வேண்டும்.

*401.* உச்சி வெயிலில் நடப்பது தவறு. சூரிய அஸ்தமன சமயத்தில் தூங்கக்கூடாது, சாப்பிடக் கூடாது. இரவில் நடு ஜாமத்தில் வெளியில் செல்லக்கூடாது. விளக்கு ஏற்றிய பிறகு பால், தயிர் இவற்றை பிறர்க்குக் கொடுக்கக் கூடாது. விருந்தாளி போன பிறகு வீட்டைக் கழுவி சுத்தப்படுத்தக்கூடாது.

*402.* அமாவாசையன்று எண்ணெய் தேய்த்துக் குளிக்கக்கூடாது. சுபகாரியங்கள் செய்யக்கூடாது. செவ்வாய், சனிக்கிழமை புதிய ஆடைகள் உடுத்தக் கூடாது. அமாவாசை நாளில் முடி வெட்டிக் கொள்ளக்கூடாது. வெள்ளிக்கிழமை உப்பு வாங்கினால் செல்வம் வளரும். வெள்ளிக்கிழமை பாலைக் கொட்டினால் தரித்திரம் வரும்.

403. பெரியோர் தம்மிடம் அன்பு காட்டாதவரிடமும் தாமே வலியச் சென்று உதவி செய்வர். சிறியோர் உதவி என்று கேட்டால் சீறி எழுவர். பிறர்க்கு அவர்கள் கேட்காமலே உதவி செய்வதுதான் மனிதனாக பிறந்ததன் பயனாகும்.

404. நல்ல உள்ளம் உடையவருடைய கடும் சொல் லும் இன்பம் விளைவிக்கும். கெட்டவர்களுடைய இன்சொல்லும் துன்பம் விளைவிக்கும்.

405. உலோபிகள் தானும் அனுபவிக்காமல் பிறரும் அனுபவிக்க விடாமல் செய்வர்.

406. உண்மையான நட்பு பிரிக்க முடியாதது. சந் தர்ப்ப சூழ்நிலையால் பகைமை ஏற்பட்டு நட்பு பிரிந்து பிறகு கூடும் நட்பு உறுதியாக யிருக்காது.

407. கோபம் கொள்வது சுலபம். அதை அடக்குவது கடினம். கோபம் கொள்ளாமல் இருந்தால் அது நன்மை யைத் தரும், தீராக் கோபம் பெரிய இன்னலை ஏற்படுத்தும்.

408. நமக்கு பகைவர் வலியவராக யிருந்தால், அவ ரைவிட வலியவருடன் சேர்ந்தால் பயமில்லை. வலியவ ருடன் எதிர்த்து போரிடும்போது பின் வாங்கக்கூடாது.

409. பெரியோர் தம் குறையை நீக்காமல் பிறர் குறையை நீக்குவர். தம் செல்வத்திற்கு ஏற்ப அதிகமா கவோ அல்லது குறைவாகவோ கொடுப்பார்கள். ஒன் றும் கொடுக்காமலிருக்க மாட்டார்கள்.

410. அறிவுடையோர், எத்தனை செல்வம் இருந்தா லும் அது ஒருநாள் அழிந்துவிடும் என்பதை அறிந்து

அடக்கமாகயிருப்பார்கள். கர்வம் கொள்ள மாட்டார்கள். மூடர்கள் கொஞ்சம் பணம் இருந்தாலும் துள்ளிக் குதிப்பார்கள்.

411. ஒருவர் மகிழ்ச்சியடைய வேண்டுமென்றால் இன்சொல்லே சொல்ல வேண்டும். அது சொன்னவருக்கும் கேட்பவருக்கும் இன்பமளிக்கும்.

412. முட்டாள்கள் கர்வம் அறிவுடையவர் முன்பு அடங்கும்.

413. எக்குலத்தவர் ஆனாலும், அறிவும் கல்வியும் உள்ளவரை உலகம் போற்றும். கல்வி அறிவு அற்றவர்களை யாரும் மதிக்கமாட்டார்கள். பிறப்பால் உயர்வு தாழ்வு இல்லை.

414. அறிவுள்ளவர்கள், தர்ம சிந்தனையுடன் உள்ளவர்கள் கோபமாக யிருந்தாலும் கொடுப்பார்கள். முட்டாள்கள் மகிழ்ச்சியாக யிருந்தாலும் கொடுக்க மாட்டார்கள். மூடர்கள் நட்பு தொடக்கத்தில் நல்லது செய்தாலும் பிற்பகுதியில் கெடுதல் விளைவிக்கும்.

415. வீரனுடைய நட்புயிருந்தால் பகைவரை ஒழிக்க உதவும். உள்ளம் உறுதியடையும். தைரியமாக எதையும் செய்ய முடியும். கோழைகள் நட்பு மனதை பலகீனமாக்கி வாழ்வை சீர் குலைக்கும். தைரியம் இருந்தால் மற்றவை எல்லாம் தொடர்ந்து வந்து சேரும்.

416. சிறிய காரியத்தையும் நன்கு ஆலோசித்துச் செய்ய வேண்டும். நம்மைவிட அறிவில் உயர்ந்தவரிடம் ஆலோசன்னை பெறவேண்டும். அந்த ஆலோசனையும் நல்லதுதானா என்று ஆராய்ந்து ஏற்றுக் கொள்ள வேண்டும்.

417. நம் சந்தோஷத்தை, சாதனைகளை பிறருடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். துக்கத்தை நம்முடனேயே வைத்துக் கொள்ள வேண்டும். நம் நண்பனிடம் கூட நம் வறுமையைச் சொல்லக் கூடாது.

418. கெட்டசகவாசம் துன்பம் உண்டாக்கும். சூதாடுவது, திருடுவது, விதண்டாவாதம் செய்வது, ஊர் விட்டு ஊர் போவது, அழையாத வீட்டிற்குப் போவது, வறுமையாக இருக்கும் போது உறவினர் வீட்டிற்குச் செல்வது, கடன் வாங்குவது இவை துன்பத்தை உண்டாக்கும்.

419. நண்பன் தீமை செய்தால் அவன் நட்பை விட்டுவிட வேண்டும். வஞ்சகமான நட்பைவிட நேர் விரோதம் மேல். கூடயிருந்து குழிபறிப்பவனை எக்காரணம் கொண்டும் மன்னிக்கக் கூடாது.

420. பொருள் இழந்த காலத்திலும் மனம் தளராதிருந்தால் மீண்டும் சம்பாதிக்கலாம். ஊக்கமும் உடல் உறுதியும் இருந்தால் செல்வம் தானாக வந்து சேரும்.

421. கையிலிருக்கும் பொருளைவிட கல்வி சிறந்தது. கல்வி உடையவர் எங்கு சென்றும் வாழ முடியும்.

422. குழந்தைகளும் பைத்தியக்காரர்களும் தான் உண்மை பேசுவார்கள். சாகப் போகிறவனும் உண்மை பேசுவான். மற்றவர் பேச்சை ஆராயாமல் நம்பக் கூடாது.

423. நாம் என்ன நினைக்கிறோமோ அதுதான் நடக்கும். நாம் நினைப்பது நல்லதாகயிருக்க வேண்டும். பிறர்க்கு நன்மை விளையக் கூடியவைகளையே எண்ண வேண்டும். அல்லது பிறருக்கு பாதகம் இல்லாத வகையி

லாவது எண்ண வேண்டும். எண்ணிய எண்ணம் ஈடேற சுய முயற்சியும் வேண்டும். சுய முயற்சியும் கடவுள் அருளும் இருந்தால் எதுவும் நடக்கும்.

*424.* வீட்டிற்கு வரும் அதிதியை உபசரிக்காதவன் நரகத்தை அடைவான். தன்னை அண்டியவர்களைக் காட்டிக் கொடுப்பவன், பிறர் சொத்தை வஞ்சகமாக ஏமாற்றி எடுத்துக் கொள்பவன், நம்ப வைத்து கழுத்தை அறுப்பவன் இந்த ஜென்மத்திலேயே அதன் பலனை அனுபவிப்பான்.

*425.* உணவு உண்ணும்போது தனக்குப் பிரியமான வர்களை உடன் வைத்துக் கொள்ள வேண்டும். உணவை முதலில் கடவுளுக்கு நிவேதித்துவிட்டுச் சாப்பிட வேண் டும். சாப்பிடும்போது பேசக் கூடாது. சாப்பிட்ட பிறகு சற்று ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும்.

*426.* உணவு தயாராகும் அறையை யாரும் பார்க்க அனுமதிக்கக்கூடாது. உணவை எலி, பூனை, நாய் முகர்ந்து பார்த்தால் அதை உண்ணக்கூடாது. உணவில் தலைமயிர் இருந்தால் அதை சாப்பிடக் கூடாது. உணவு உண்ணும்போது விளக்கு அணைந்தால், விளக்கு ஏற்றிய பிறகு சாப்பிட வேண்டும். உப்பை இடது கையால் போட்டுக் கொள்ளக் கூடாது. இரவில் இஞ்சி, தயிர், நெல்லிக்காய் சேர்த்துக் கொள்ளக்கூடாது.

பகலில் தயிர் சாதமும் இரவில் பால் சாதமும் சாப்பிட்டால் ஆயுள் வளரும். மிதமாக சாப்பிடுவது நல்லது. முதலில் உண்ட உணவு ஜீரணமானபின்தான்

மறுபடி உண்ண வேண்டும். பகலில் தூங்கக் கூடாது. உடலை வறுத்தி தேகப் பயிற்சி செய்யக் கூடாது.

427. விரோதிகளை எந்த சமயத்திலும் நம்பக் கூடாது. சந்தர்ப்பம் சூழ்நிலை பார்த்து நம்மை ஒழித்து விடுவார்கள். விழிப்புடன் இருந்து அவர்களைக் கண்கா ணிக்க வேண்டும். முளையிலே அவர்களைக் கிள்ளி எறிய வேண்டும். அவர்களுடன் பேரம் பேசக்கூடாது.

428. கோவில் இல்லாத ஊரில் குடியிருக்கக் கூடாது. உறவினர் இல்லாத ஊருக்குப் போகக் கூடாது. அற்பர்க ளுடன் நட்பு வைத்துக் கொள்ளக் கூடாது. குலம் கோத்ரம் ஜாதி பார்க்காமல் பெண் எடுக்கக் கூடாது. முன்பின் தெரியாத வைத்தியர்களிடம் வைத்தியம் பார்த் துக் கொள்ளக் கூடாது. கண்டவர்களிடம் ஜோஸ்யம் கேட்கக் கூடாது.

429. மீண்டும் சொல்கிறேன். பேசும்போது சிந்தித் துப் பேசவேண்டும். தேவையானால்தான். பேசவேண் டும். பிறர் பேசும்போது குறுக்கிடக் கூடாது. பிறர் பேசும் ரகசியத்தை ஒட்டுக் கேட்கக் கூடாது. பேச்சை விட மௌனம் சாலச் சிறந்தது.

430. பேராசை கொண்ட புரோகிதர்கள், மலடி, நடத்தை கெட்டவர்கள், ஊரை ஏமாற்றி உலையில் போடுபவர்கள், லோபிகள், உண்மை அன்பு இல்லாத வர்கள் இவர்கள் இல்லங்களில் சாப்பிடக் கூடாது.

431. பொய்யினால் பலகீனம் ஏற்படும். உண்மை யால் பலம் ஏற்படும். பொய் விரோதத்தை உருவாக்கும். உண்மை நட்பை உண்டாக்கும். பொய் வேகமாகப் பரவும். உண்மை மெதுவாகத் தென்படும். பொய் அதிக

நாட்கள் நிலைக்காது. உண்மை எந்த சோதனையிலும் வென்று நிலைக்கும்.

432. மனித வாழ்க்கை சந்தேகம் நிறைந்தது. உயர்ந்த சிந்தனையால் சந்தேகத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும். மனத் திருப்தியினால் கஷ்டங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும். தேவைகளைக் குறைத்து நிம்மதியைத் தேடிக் கொள்ள வேண்டும். உற்சாகமாயிருந்து நம்பிக்கையை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

433. கோழைகள்தான் மரணத்தைக் கண்டு பயப்படுவார்கள். வீரர்கள் எதைக் கண்டும் பயப்படுவதில்லை. எதையும் தாங்கும் சக்தியைக் கொண்டு யாருக்கும் பயப்படாமல் வாழ்வதே வாழ்க்கையாகும்.

434. கங்கையை விட புனிதமான ஆறு இல்லை. தாயைவிட சிறந்த ஆசிரியர் இல்லை. வேதத்திற்கு ஒப்பான சாஸ்திரம் இல்லை. சாந்திக்கு ஒப்பான சுகம் இல்லை. பொறுமையை விட வலிவான ஆயுதம் இல்லை. புகழைவிட சிறந்த செல்வம் இல்லை. கல்வி அறிவைவிட பயன்மிக்க லாபம் இல்லை.

435. சோம்பேறித்தனம் வறுமைக்கு தந்தை, அவல வாழ்வுக்கு வழிகாட்டி, கள்ளம் கபடங்களுக்கு சகோதரன். சோம்பேறித்தனம் இடம்பெற வாழ்வில் அனுமதிக்கக் கூடாது.

436. எல்லா கஷ்டங்களுக்கும் காரணம் அறியாமையே, அதைப் போக்கிக் கொள்ள நன்கு கல்வி கற்க வேண்டும். அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். பெரியோர் அறிவுரைகளை அலட்சியப் படுத்தக் கூடாது. மூடர்களுடன் நட்பு கொள்ளக் கூடாது.

437. வாழ்க்கையில் முன்னேற வேண்டுமானால் அளவுக்கு மீறிய தூக்கம், கவலை, பயம், சோம்பல், கோபம் இவைகளை விட வேண்டும். எதிலும் மிதமாக யிருக்க வேண்டும். ஒன்றையே கொள்கையாகக் கொண்டு கடுமையாக உழைக்க வேண்டும். பிறர் நம்மைப் பற்றி எது பேசினாலும் போற்றினாலும் தூற்றினாலும் சலனப் படக் கூடாது. தேவைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டும்.

438. வீட்டில் அகத்தி, முருங்கை, எட்டி, நாவல், பனை ஆகிய மரங்களையும், பருத்தி, எருக்கு முதலிய செடிகளையும் வளர்க்கக் கூடாது. பூனை, புறா இவைகளை வீட்டில் வைத்துக் கொள்ளக் கூடாது. போலி சந்யாசி, பொய் பேசுபவன், பெண்களிடம் சிரித்துப் பேசுபவன், முரடன், முட்டாள் இவர்களை வீட்டில் தங்கவிடக் கூடாது.

439. நோய், நெருப்பு, பகை, கடன் இவைகளை மிச்சம் வைக்கக் கூடாது. சமயம் பார்த்து இவை நம்மை அழித்துவிடும்.

440. இளமையில் கல்வி கற்காமலும், பொருள் சேர்க்காமலும் இருந்தால் முதுமையில் கஷ்டப்பட நேரிடும். முதுமைக்கு வேண்டியதை இளமையிலேயே தேடிக் கொள்ள வேண்டும்.

441. பணத்தால் அன்பையோ, நிம்மதியையோ வாங்க முடியாது. தூய உள்ளம், தொண்டு செய்யும் ஆர்வம், பிறர்க்கு ஆதரவாக யிருப்பது, இரக்கம், தெய்வ சிந்தனை இவையே நிம்மதியளிக்கும்.

442. தவறு செய்ய மனம் தூண்டும். ஆனால் சந்தர்ப் பம் ஏற்படும்போது அதை விலக்கி நேர்மையாக யாரால் இருக்க முடிகிறதோ அவர்கள்தான் உண்மையில் வெற்றி பெற்றவர்களாவர்.

443. மனநிறைவுதான் செல்வம். உள்ளதைக் கொண்டு திருப்தியடைய வேண்டும். மேலும் வேண் டும் என ஆசைப்படுவதுதான் வறுமை. இந்த வறுமை வாழ்வைக் கெடுக்கும்.

444. உயர்ந்த குலத்தில் உதித்தவர்களுக்குத்தான் உயர்ந்த எண்ணம் வரும், கீழ்குலத்தில் பிறந்தவர்களுக்கு தாழ்ந்த எண்ணம் வரும் என்பதில்லை சேற்றில்தான் தாமரை முளைக்கும். சிப்பியில்தான் முத்து பிறக்கும். மான் வயிற்றில் தான் கஸ்தூரி பிறக்கும். விஷம் உற்பத்தி செய்த பாற்கடலில்தான் லக்ஷ்மி பிறந்தாள். உயர்ந்த சிந்தனையிலிருந்துதான் உயர்ந்த எண்ணம் உருவாகும். உயர்ந்த எண்ணத்திலிருந்துதான் வாழ்வு சிறப்பாக முடியும்.

445. நம்பிக்கை உள்ளவனுக்குத்தான் எதிர் காலம். கடந்தகால இன்பங்களை எண்ணி நிகழ் காலத்தை மறந்துவிடக் கூடாது. நாம் ஆற்ற வேண்டிய கடமை களை ஒழுங்காகச் செய்ய வேண்டும். இன்று நம்முடை யது.

446. யாரையும் எதுவும் கேட்காமலிருப்பது கௌர வம். நம் வருவாயில் வாழ்வது கௌரவம். கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவது கௌரவம். வாங்கிய கடனை திருப்பிக் கொடுப்பது கௌரவம்.

447. பொன் ஆசை மிக்கவர்களுக்கு உறவினர் இல்லை. பசியுள்ளவர்களுக்கு, இனிய உணவோ சிறந்த

உணவோ தேவையில்லை. காம ஆசை கொண்டவர்க ளுக்கு அச்சமும் இல்லை, அவமானமும் இல்லை. பொன்னாசை, பெண்ணாசை, பசி, தூக்கம், இன்பம் இவைகளைக் கட்டுப்படுத்த வேண்டும்.

*448.* பேசும்போது உறுதியுடன் இருக்க வேண்டும். தோல்வியின்போது பொறுமையாக யிருக்க வேண்டும். வெற்றியின்போது பெருந்தன்மையுடன் இருக்க வேண் டும். அமைதியாக இருக்கும்போது நல்ல எண்ணத்துடன் சிந்திக்க வேண்டும்.

*449.* அறியா பாலகன், பொய் பேசுபவன், பைத்தியக் காரன், பேய் பிடித்தவன், நோயாளி, பேராசை கொண்ட வன், கள் குடிப்பவன், தொந்தரவு செய்பவன், பொருள் மாற்றி அர்த்தம் கூறுபவன், கல்வி அறிவு இல்லாதவன் — இவர்கள் அறிவுரை கூற தகுதியற்றவர்கள். இவர்களி டம் எந்த ஆலோசனையும் கேட்கக் கூடாது.

*450.* நண்பனை பகைவனாக்கிக் கொள்வதும், பகை வனை நண்பனாக்கிக் கொள்வதும், சுற்றியிருப்பவர் களை சந்தேகிப்பதும், நல்லவர்களின் வார்த்தைகளை ஒதுக்கித் தள்ளுவதும், இயல்பான குணங்கள் மாறுவ தும் பின்னால் வரும் துன்பங்களைக் காட்டும் அடையா ளங்கள் ஆகும். இவைகளை விலக்கிக் கொள்ள முயற் சிக்க வேண்டும்.

*451.* கேட்பதற்கு இனிய, நல்ல, பயனுள்ள சொற் களை உபயோகிப்பவர்களுக்கு எல்லா நன்மைகளும் வந்தடையும், இரக்க குணம் உடையவர்க்கு தெய்வம் உதவி புரியும். அன்பு உள்ளம் கொண்டவர்க்கு உலகம் தலை வணங்கும்.

452. சேருமிடம் அறிந்து சேர வேண்டும். உயர்ந்தவனிடம் சேர்ந்தால் உயர்வும், கீழ்மக்களுடன் சேர்ந்தால் தாழ்வும் உண்டாகும். கொடியவர்களின் பார்வையில் படாமல் ஒதுங்கி வாழ வேண்டும்.

453. பகைவரைப் பெரியவர் சிறியவர் என்று எண்ணிப் புறக்கணிக்கக் கூடாது. பகைவரை முறியடித்து வெற்றியை நிலைநாட்ட வேண்டும். ஏனெனில் குட்டித் தேளாக இருந்தாலும் பெரிய தேளாக இருந்தாலும் கொட்டினால் விஷம் விஷம்தான்.

454. துறவறம் என்பது குடும்பத்தைத் துறப்பது மட்டும் அல்ல. எல்லா ஆசைகளையும் துறக்க வேண்டும். துறவிகள் ஒரு வேளை தான் உண்ண வேண்டும். ஒரேயிடத்தில் தங்கியிருக்கக் கூடாது. கல்லையும் வைரத்தையும் ஒன்றாக மதிக்க வேண்டும். கோபத்திற்கு இடம் கொடுக்கக்கூடாது. எந்த நிகழ்ச்சியிலும் கலந்து கொள்ளக் கூடாது. பிறர் கொடுப்பதை வாங்கி சேகரிக்கக்கூடாது.

455. தானம் கொடுக்கும் போது தேவையானவர்களுக்கே கொடுக்க வேண்டும். உணவை பசியுள்ளவர்களுக்கே அளிக்க வேண்டும். பணத்தை ஏழைகளுக்கே கொடுக்க வேண்டும்.

456. அழகு, பெண்ணுக்கு ஒரு ஆயுதம். அன்பு பெண்ணுக்கு ஒரு பொக்கிஷம். அடக்கம் ஒரு அணிகலன், மௌனம் அவளை தேவதை யாக்கும்.

457. உண்மையான அழகு உடலில் இல்லை. தூய்மையான, அன்புள்ள, இரக்கமுள்ள உள்ளத்தில் தான் இருக்கிறது.

458. சில பெண்கள் காரணம் இன்றி சிரிப்பார்கள். காரணம் இன்றி அழுவார்கள். சிரிக்கிற பெண்களையும்

அழுகிற ஆண்களையும் நம்பக்கூடாது. பெண்கள் பலகீனமானவர்கள். சில சூழ்நிலைக்கு ஏற்பத் தங்களை மாற்றிக் கொள்வார்கள். அவர்களை எப்போதும் முழுவதுமாக நம்பக் கூடாது.

459. ஒரு சிறு எலும்புக்காக நாய் வாலைக் குழைத்துக் கொண்டு அங்கும் இங்கும் திரியும். ஆனால் யானையோ அப்படி அலைவதில்லை. நாம் கௌரவமாக வாழ வேண்டும் என்றால் யானையைப் போல் இருக்க வேண்டும். சிறுசிறு லாபத்திற்காக, சலுகைகளுக்காக பல்லிளித்துக் கொண்டு அலையக் கூடாது.

460. திருவாதிரை, பரணி, கார்த்திகை, ஆயில்யம், பூரம், பூராடம், பூரட்டாதி, கேட்டை, விசாகம், சுவாதி, சித்திரை, மகம் ஆகிய நட்சத்திரங்களில் கடன் வாங்கிச் சென்றவர் திருப்பிக் கொடுக்க மாட்டார்கள். பிரயாணம் புறப்பட்டவர் நல்ல நிலையில் வீடு திரும்ப மாட்டார்கள். நோய் நொடி காரணமாக படுக்கையில் படுத்தவர் தேற மாட்டார்கள்.

461. அமைதி அழகானது. அமைதி செல்வத்தை உண்டாக்கும். முட்டாள்கள் அமைதியாக யிருக்க மாட்டார்கள். அன்பும் அறிவும் உள்ளவர்கள் அமைதியாக இருந்து எல்லாவற்றையும் சாதிப்பார்கள்.

462. ஆரம்பிக்கும்போது முடிவைச் சிந்திக்க வேண்டும். முடிந்த பிறகு சிந்திப்பது தவறு. வெற்றிபெற முடிந்தால்தான் ஆரம்பிக்க வேண்டும். நல்ல ஆரம்பம் நல்ல முடிவைத் தேடித் தரும்.

463. வறுமை சண்டையை உருவாக்கும். நல்ல குணங்களை வேரறுக்கும். செல்வம் எல்லாவற்றையும்

மூடி மறைக்கும். அதிகமான செல்வம் அதிக ஆபத்தை உண்டாக்கும்.

464. தர்மத்திற்கு எல்லை இல்லை. அன்புக்கு அளவு கோல் இல்லை. உண்மைக்கு எதுவும் ஈடு இல்லை.

465. குடும்பப் பெண்கள் வீட்டில் காலையிலும் மாலையிலும் விளக்கு ஏற்ற வேண்டும். விளக்கிற்கு நல்லெண்ணெய் உபயோகிக்க வேண்டும். விளக்கு தானாக அணைய விடக் கூடாது. பூவாலோ அல்லது பாலைத் தொட்டோ அணைக்க வேண்டும். விளக்கு ஏற்றிய பிறகு வெளியில் எங்கும் செல்லக் கூடாது. வீண் பேச்சு கூடாது. கடவுளை நினைத்து பிரார்த்தனை செய்ய வேண்டும். பிரார்த்தனைகளால் எதையும் சாதிக்க முடியும்.

466. பெரிய தவறு செய்பவனையும், போலி கௌரவம் பாராட்டுகிறவனையும், பொய் பேசுகிறவனையும், உண்மை அன்பு இல்லாதவனையும் சேவிக்கக் கூடாது.

467. தானும் அனுபவிக்காமல் பிறர்க்கும் கொடுக்காமலிருப்பவனையும், கல்வி அறிவற்றவனையும், சதா நிந்திக்கிறவர்களையும், காட்டில் வசிப்பவர்களையும், சூதாடுகிறவர்களையும் நன்றி மறந்தவர்களையும், நிஸ்டூரமாக பேசுகிறவர்களையும் ஒதுக்கி விடவேண்டும். இவர்களிடம் எவ்வளவு கஷ்டம் வந்தாலும் யாசிக்கக் கூடாது.

468. பொறுமை என்ற சக்தி யாரிடம் இருக்கிறதோ அவனை யாரும் எதுவும் செய்ய முடியாது. சத்தியம், தர்மம், சுறுசுறுப்பு, பொறாமையில்லாமை, பொறுமை,

தைரியம் இந்த ஆறு குணங்களையும் ஒரு பொழுதும் விட்டு விடக் கூடாது.

469. தெய்வ பக்தியில்லாத அறிவு பயனற்றது. மன தில் தெய்வ பக்தியில்லாது செய்யும் விரதங்கள் பயனற் றது.

470. அகங்காரம், எதையும் பொருட்படுத்தாது அதிக மாகப் பேசுதல், அளவுக்கு மீறி குற்றம் செய்தல், கோபம், தான் மட்டும் வாழ்ந்தால் போதும் என்று கருதுதல், நண்பர்களுக்குத் துரோகம் செய்தல் இந்த ஆறு குணங்களையும் விட்டுவிட வேண்டும். இவை ஆயுளைக் குறைக்கும்.

471. பெண்கள் தங்களுக்கு எல்லாம் தெரிந்தாலும் தெரியாத மாதிரி அடக்கமாக இருக்க வேண்டும். பெண்கள் யாரையும் நம்பி தங்கள் ரகசியங்களை வெளியிடக் கூடாது. தங்கள் ஆசையைத் தெரிவிக்கக் கூடாது. சுயேச்சையாக யாரையும் கணவனாக ஏற்றுக் கொள்ளக் கூடாது.

472. ஏழைகள் உழைப்பில் பணக்காரர்கள் வாழ்கி றார்கள். பணக்காரர் உதவியால் ஏழைகள் வாழ்கிறார் கள். பணக்காரன் இஷ்டப்பட்டபோது சாப்பிடுவான், ஏழைகள் கிடைத்தபோது சாப்பிடுவார்கள்.

473. எது பிறர்க்கு நன்மை அளிக்குமோ அதுதான் தர்மம். ஜீவஹிம்சை செய்யாமலிருப்பது உயர்ந்த குண மாகும். ஒழுக்கம்தான் கிடைத்தற்கரிய செல்வம். விட் டுக் கொடுத்து வாழ்வதுதான் மிகச் சிறந்த வாழ்க்கையா கும்.

474. பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வதால் அறிவு உண்டாகும். அறிவினால் பயம் வராமல் விலக்கிக் கொள்ளலாம். கடவுளைப் பிரார்த்திப்பதால் எல்லா சுகங்களையும் அடையலாம்.

475. கவலைப்படுவதால் உள்ளம் கெடுகிறது, உடல் நலமும் கெடுகிற்து. பலமும் குறைகிறது. எனவே வீணாகக் கவலைப்படக்கூடாது. கடவுளின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு நம் கடமையைச் செய்ய வேண்டும்.

476. தன்னிடம் நம்பிக்கையில்லாதவன் வீட்டிற்கு அகாலத்தில் போகக் கூடாது. நாற்சந்தியில் மறைந்து இரவில் நிற்கக் கூடாது. தனக்குச் சொந்தமில்லாத ஸ்திரீயை விரும்பக் கூடாது.

477. எதிலும் அளவுடன் இருக்க வேண்டும். அளவறிந்து உண்பதால் ஆரோக்கியம், ஆயுள்பலம், சுகம் உண்டாகும். காலையில் சூரிய உதயத்திற்கு முன்னால் குளித்தால் அழகு, ஆரோக்கியம், செல்வம், தெய்வ அருள் கிடைக்கிறது.

478. தயிர், அருகம்புல், பசு முதலியவைகளைத் தொடுவதும், நேர்மையாக யிருப்பதும், அடிக்கடி பெரியோர்களைத் தரிசிப்பதும், கோவில்களுக்கு சென்று தெய்வ தரிசனம் செய்வதும் செல்வத்தைக் கொடுக்கும்.

479. குழந்தைகளிடமும், வயதானவர்களிடமும், நோயாளிகளிடமும் கோபத்தைக் காட்டக் கூடாது.

480. சொன்னசொல் தவறக் கூடாது. நன்றி மறக்கக் கூடாது. நேர்மை, நியாயம் இவைகளைக் கடைப்பிடிக்க

வேண்டும். இவைகளை அனுஷ்டிப்பவனை உலகம் விரும்பும்.

481. அமைதியாக வாழ வேண்டுமென்றால் நமக்கென்று சிறு வீடு இருக்க வேண்டும். நிரந்தரமான வருமானம் இருக்க வேண்டும். கடன் எதுவும் இருக்கக் கூடாது. வரவுக்கு மேல் செலவு இருக்கக் கூடாது.

482. உபதேச மந்திரம், தான் பிறராலும் பெண்ணாலும் அவமானப்பட்டது, வயது, கடன், சொத்து விபரங்கள் இவைகளை பிறர்க்குக் காரணமின்றிச் சொல்லக் கூடாது.

483. மனிதனாகப் பிறந்தவன் தன் வாழ் நாளில் ஏதாவது ஒரு புனித யாத்திரை செய்ய வேண்டும். சேர்த்துவைத்த பணத்தில் தானதர்மம் செய்ய வேண்டும். ஏழை எளியவர்களுக்கு உதவ வேண்டும்.

484. உடல் ஆரோக்கியமாக இருப்பது ஒரு இன்பம். கவலையில்லாமல் இருப்பது ஒரு இன்பம். பிறர்க்கு உதவியாக இருப்பது மற்றொரு இன்பம். மக்களுக்கு சேவை செய்வதையே நாம் பிறந்த பயனாகக் கருத வேண்டும்.

485. பணம் உள்ளவரைத்தான் இந்த உலகம் விரும்பும். பணம் உள்ளவர்களுக்குத்தான் மதிப்பு. பணம் உள்ளவர்கள் சொல்வதுதான் வேத வாக்கு. எனவே உழைத்துப் பணம் சேர்க்க வேண்டும். நல்ல வழியில் சம்பாதிக்க முயற்சி செய்ய வேண்டும். விடா முயற்சி வெற்றியைத் தேடித்தரும்.

486. புகை நுழையாத இடத்தில்கூட வறுமை புகுந்துவிடும். வறுமை வந்தால் உடல் உள்ளம் பலகீனமடையும், பிறர் வெறுப்பார்கள். நாம் சொல்லும் வார்த்தைக

ளுக்கு மதிப்பு யிருக்காது. எனவே வறுமைக்கு இடம் கொடுக்கக் கூடாது.

487. நமக்கு வேண்டியவர்களுக்கு விருந்து அளிப்ப தல்ல அதிதி உபசாரம். பசியோடு வருபவர்களுக்கு முன்பின் தெரியாதவர்களாக இருந்தாலும் உணவு அளிக்க வேண்டும். ஏழை எளியவர்களிடம் அன்பு காட்டி உதவி புரிய வேண்டும். பிறர் கேட்காமல் நாமே செய்வதுதான் உதவி.

488. தினசரி ஒரு மணி நேரமாவது கடவுளைத் தியானம் செய்ய வேண்டும். தனியறையில் காலையில் நிம்மதியாக உட்கார்ந்து கொண்டு தியானம் செய்ய வேண்டும். இஷ்ட தெய்வத்தை மனதில் நினைத்துக் கொண்டு ஜபம் செய்தால் பலனுண்டு.

489. ஜபத்திற்கு உகந்த இடங்கள்: மலையின் உச்சி, புண்ணிய நதிகளின் கரைகள், வில்வமரத்தின் அடி, குளம், மாட்டுக் கொட்டில், ஆலயம், அரச மரம், உத்தியானம், துளசிக்காடு, புண்ணிய க்ஷேத்திரம், தனி மையிடம் ஆகியவையாகும்.

490. சூரியன், சந்திரன், அக்கினி, ஜலம், அந்தணர், பசு—இவைகளின் எதிரில் இருந்து கொண்டு ஜபிப்பது நல்ல பயனைக் கொடுக்கும். கம்பளியினாலான ஆசனத் தில் அமர்ந்து கொண்டு ஜபிக்க எல்லா இஷ்டங்களும் பூர்த்தியாகும். மான் தோல், புலித்தோல் மீது அமர்ந்து ஜபிக்க மோக்ஷம் கிடைக்கும். தர்பாசனம் ஞானத்தை யும், இலைகளாலான ஆசனம் ஆரோக்கியத்தையும் கொடுக்கும்.

491. உப்பு, உள்ளிப்பூண்டு, வெங்காயம், வெற் றிலை, இரண்டு வேளை சாப்பாடு, வெங்கலப் பாத்திரத்

தில் சாப்பிடுவது, கெட்ட சகவாசம் இவைகளை ஜபம் செய்பவர் உடனடியாக ஒதுக்க வேண்டும். இரவில் ஜபம் செய்வது கூடாது.

**492.** மந்திரஸித்தி அளிக்கக் கூடியவை: பூமியில் படுக்கை, பிரம்மச்சரியம், மௌனம், அஸூயை இன்மை, மூன்று வேளை ஸ்நானம், அற்பமான காரியங்களை விலக்குதல், நித்ய பூஜை, நித்ய தானம், தேவதா ஸ்துதி, தினசரி செய்ய வேண்டிய பூஜைகள், பண்டிகைகள், விரதம், ஜபத்தில் ஈடுபாடு இவை எல்லாம் சித்தியாகும்.

**493.** ஜபம் செய்பவர்கள் தலைப்பாகை, சட்டை அணியக் கூடாது. வஸ்திரம் இல்லாமலும், தலை விரித்துக் கொண்டும், பெண்களுடனும், பவித்ரம் இல்லாமலும், அசுத்தனாகவும் வம்பு பேசிக் கொண்டும் ஜபம் செய்யக் கூடாது.

**494.** திங்கள், புதன், வெள்ளி, சனி இந்த நாட்களில் விருந்து கொடுக்கவோ, விருந்து உண்ணவோ நல்ல நாட்களாகும். மற்ற நாட்களில் விருந்து அளித்தாலோ, விருந்து சாப்பிட்டாலோ, பகை வளரும் உறவு முறியும்.

**495.** புது உடை அணிய வியாழன், வெள்ளி உகந்த நாளாகும்.

**496.** ஒருவர் படுக்கும் படுக்கையில் மற்றொருவர் படுக்கக் கூடாது. ஒருவர் உபயோகிக்கும் உடையை வேறு ஒருவர் உபயோகிக்கக் கூடாது. பிறர் சாப்பிட்டு மீதி வைத்ததைச் சாப்பிடக் கூடாது.

**497.** உடல் ஆரோக்கியமாக யிருக்கக் கீழ்க் கண்டவைகளை அனுஷ்டிக்க வேண்டும். தினசரி காலையில் குளிர்ந்த நீரில் குளிக்க வேண்டும். சுத்தமான உடைகளை

அணிய வேண்டும். சூடான பதார்த்தங்களைச் சாப்பிட வேண்டும். பழைய உணவுகளை ஒதுக்கிவிட வேண் டும். கோபம், கவலைகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது. பகலில் தயிரும், இரவில் பாலும் சேர்த்துக் கொள்ள வேண்டும். தினசரி தேகப்பயிற்சி செய்ய வேண்டும்.

498. பிறர் செல்வத்தையோ, செல்வாக்கையோ கண்டு பொறாமைப் படக்கூடாது. குறுக்கு வழியில் பணம் சம்பாதிக்க முயலக் கூடாது. பணத்தை நல்ல முறையில் சம்பாதிக்க வேண்டும்: நல்ல முறையிலேயே செலவழிக்க வேண்டும். பணம் கொஞ்சம் கொஞ்சமாக வரும். போகும்போது எல்லாம் அடியோடு மொத்தமா கப் போகும். பணத்தின்மீது அதிக ஆசையையோ, அதில் நம்பிக்கையோ வைக்கக் கூடாது.

499. தன்னைவிட அடுத்தவன் சுகமாக யிருக்கிறானே என்ற எண்ணந்தான் எல்லாத் துன்பங்களுக்கும் காரண மாகயிருக்கிறது. எனவே எதற்கும் பொறாமைப்படக் கூடாது.

500. கடுமையான கஞ்சத்தனம், தகுதியற்ற தற்பெ ருமை, பேராசை, கோபம், வஞ்சக எண்ணம் இவை மனிதனை ஒழித்துவிடும். இவைகளை நீக்கி தூய எண்ணம், ஒழுக்கம், அன்பு, அடக்கம் இவைகளை மனதில் வளர்க்க வேண்டும்.

501. மன அமைதி, ஆனந்தம் இவை பணத்தால் கிடைக்காது. அன்பு, கடவுள் அருள், தியாகம் போன் றவை இருந்தால்தான் கிடைக்கும். கடவுள் அருள்

கிடைக்க வேண்டுமென்றால் பிறர்க்கு நன்மை உண்டாக்குவதே செய்ய வேண்டும். யாருக்கும் மனதால்கூட கெடுதல் நினைக்கக்கூடாது. உண்மையைத் தவிர வேறு எதையும் பேசக்கூடாது. அந்த உண்மை நன்மை செய்வதாக யிருந்தால்தான் பேசவேண்டும்.

502. காலையில் சூர்யோதயத்திற்கு முன்பாக எழுந்து வீட்டு வாசலைப் பெருக்கி சாணம் தெளிக்க வேண்டும். வெறும் தண்ணீரைத் தெளிக்கக் கூடாது. சாணம் கலக்க புதுத் தண்ணீரையே உபயோகிக்க வேண்டும். கோலம் இடாதவர்கள் வீட்டில் திருமகள் தங்கமாட்டாள்.

503. சுறுசுறுப்பாக யிருங்கள். செல்வம் வந்தடையும். சோர்வுக்கு இடம் கொடுக்காதீர்கள், வெற்றி கிடைக்கும். யாருக்கும் வாக்கு கொடுக்காதீர்கள் நிம்மதி கிடைக்கும். எல்லோரையும் நேசியுங்கள், சந்தோஷம் உண்டாகும். கடவுளை நம்புங்கள், நினைத்தது நடக்கும்.

504. உள்ளத்தையும் உடலையும் சுத்தப்படுத்த வேண்டும். தூய நடத்தை உள்ளத்தை சுத்தமாக்கும். தினசரி ஸ்நானம் உடலைச் சுத்தப்படுத்தும். நல்லோர்கள் சகவாசம் மனதை நல்ல வழியில் செலுத்தும்.

505. தினசரி ஒருமணி நேரமாவது மௌனம் கடைபிடிக்க வேண்டும். தனியிடத்தில் இருந்து தியானம் செய்ய வேண்டும். தியானம் மனதைச் சுத்தப்படுத்தும். நல்ல எண்ணம், தூய சிந்தனை உதயமாகும். கடவுளை அடைய ஒரேவழி தியானம்தான். நமக்காக இல்லாமல் பிறர்க்காக பிரார்த்தனை செய்தால் பலனளிக்கும்.

506. ஒழுங்கான நடத்தை மனதை அமைதிப்படுத்தும். மனஅமைதி சந்தோஷத்தை உருவாக்கும் சந்தோஷம் நம் வாழ்வை நல்வழியில் பயன்படுத்த உதவும்.

507. உள்ளம் ஒரு போர்க்களம் போன்றது. நாம் ஒழுக்கத்தோடு வாழ வேண்டுமென்றால் ஓயாமல் மனத்தோடு போராட வேண்டும்.

508. தெரிந்ததை எல்லாம் சொல்லாதே. கேட்டதை எல்லாம் நம்பாதே. முடிந்ததை எல்லாம் செய்யாதே. மனச் சாட்சிதான் நல்ல நீதிபதி. காலம்தான் சிறந்த ஆசிரியர். உலகம்தான் உயர்ந்த புத்தகம். கடவுள்தான் உத்தமமான நண்பர்.

509. நாம் அளிப்பது மிகவும் குறைவு என்ற எண்ணத்தில் நாணிக் கொண்டு தானம் அளிக்க வேண்டும். வேண்டியவர், வேண்டாதவர் என்று பார்க்கக் கூடாது. தேவையானவர்களுக்குத்தான் தானமளிக்க வேண்டும்.

510. நம்பிக்கைக்கு உரியவர்களே சிறந்த உறவினர்கள். தைரியமே நண்பன். அறிவுதான் தந்தை. உண்மைதான் நமக்கு வழிகாட்டி. பொறுமைதான் நமது செல்வம்.

511. அன்பு சில குறைகளைப் பொருட்படுத்தாது. அறிவு சில பிழைகளைப் பொருட்படுத்தாது. ஆனால் உண்மை எந்த அவமானத்தையும் மன்னிக்காது.

512. காமமும் குரோதமும் அமைதியையும் அறிவையும் சீர்குலைக்கும். உடலுக்கு உறுதியைத் தருவதுபோல் சில இடையூறுகளும் துன்பங்களும் கூட மனதிற்கு உறுதியையும் தெம்பையும் புத்துணர்ச்சியையும் அளிக்கும்.

**513.** ஒருவர் அளவுக்கு அதிகமாய் பேசிக் கொண்டே போனால், அதில் அதிகமாய் பொய்கள் கலந்திருக்கும். உண்மையைக் கூற அதிகமான வார்த்தைகள் தேவையில்லை. தீமை விளைவதானால்கூட உண்மையையே பேச வேண்டும். உண்மையால் வரும் தீமை யாவும் முடிவில் நன்மையாகத்தான் மாறும்.

**514.** இளமையில் வரும் வறுமையும், முதுமையில் வரும் செல்வமும் துன்பத்தை விளைவிக்கும்.

**515.** தாய், தந்தை, குரு மற்றும் பெரியோர்கள் முன் உயர்ந்த ஆசனத்தில் அமரக்கூடாது. அவர்களுடன் சரிசமமாக எதிர்வாதம் செய்யக்கூடாது.

**516.** ஆணவமும், தகுதிக்கு மீறிய ஆடம்பரமும் வாழ்க்கையைச் சீரழித்துவிடும். விரோதியிடத்தில் மறைக்கக்கூடிய ஒன்றை அவசியமில்லாமல் நண்பனிடமும் சொல்லக்கூடாது.

**517.** எல்லோரையும் எல்லாக் காலங்களிலும் சந்தோஷப்படுத்த முடியாது. மற்றவர்களைச் சந்தோஷப்படுத்துவதற்காக தவறான வழியிலோ நமக்கு அதிகமான துன்பத்தைத்தரும் செயலையோ செய்யக் கூடாது. நமக்கு எது சரியென்று படுகிறதோ அதன்படி தான் நடக்க வேண்டும்.

**518.** நேற்றையதினம் சமைத்து மீந்த உணவு வகைகளை உட்கொள்ளக்கூடாது. ஒரு நாளைக்கு இரண்டு வேளை மட்டும் புசிக்க வேண்டும். அதுவும் பசியின்றிப் புசிக்கக் கூடாது.

519. துடைப்பத்தால் பெருக்கும்போது எழுகின்ற தூசி நம்மீது படக்கூடாது. அவ்வாறே மாத விலக்குள்ள பெண்கள் நடக்கும்போது எழும் தூசியும் படக்கூடாது.

520. காய்ச்சிய நீரை உட்கொள்ள வேண்டும். நீர் விட்டுப் பெருக்கிய மோரை உட்கொள்ள வேண்டும். காய்ச்சிய நெய்யை உபயோகப்படுத்த வேண்டும்.

521. ஐந்து பேரைத் தாயாகப் போற்ற வேணடும். 1. ஈன்றெடுத்த தாய் 2. ஆசானின் துணைவி 3. அரசனின் மனைவி 4. அண்ணனின் மனைவி 5. கணவன் மற்றும் முனைவியின் தாய்.

522. சைவாகமத்தில் கூறப்பட்டுள்ள ஈசனின் குணங்கள்: தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், பாசங்களிலிருந்து இயல்பாக நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகியன.

523. பகவான் கீதையிலே கூறுகிறார்: ''துன்பங்கள் வாட்டும்போது மனம் கலங்காமலும், இன்பங்கள் சேரும்போது அதனையே பற்றிக் கொண்டு நில்லாமலும், ஆசை, அச்சம் போன்றவற்றை அகற்றுகின்றவன் எவனோ, அவனே ஞானத்தை உடையவன், எதிலும் அதிகமான அன்பு செலுத்தாமலும், நன்மையும், தீமையும் வரும்போது எதிலும் சார்ந்து மகிழ்ச்சியோ, துக்கமோ கொள்ளாமலும், எவன் ஒருவன் இருக்கின்றானோ, அவனே நிலையான அறிவு பெற்றவன்.



✦ ✦ ✦

# "நீதி சாஸ்திரம்"

## நூலைப் போன்று படிக்க - பாதுகாக்க - பரிசளிக்கத் தகுந்த எமது பிற நூல்கள்!

☐ நல்வழி காட்டும் பகவத் கீதை 24.00

எளிய நடையில் முக்கியக் குறிப்புகளுடன் தெளிவான விளக்க உரையுடன் பகவத் கீதையின் முழுமையான மொழி பெயர்ப்பு, பகவத் கீதை எப்படித் தோன்றியது, பகவத் கீதையின் போதனைகள், பகவத் கீதையைப் படிக்க வேண் டியதின் அவசியம், பகவத் கீதையின் சம்ஹார தாத்பர்யம் போன்ற முக்கியமானவற்றையெல்லாம் தெளிவாக விளக்கி, அதைத் தொடர்ந்து பதினெட்டு அத்தியாயங்களுக் கும் ஸ்லோக வரிசை எண்ணின்படி பாமர மக்களுக்கும் புரியும் விதத்தில் ஆசிரியர் அம்மன் சத்தியநாதனின் விளக்க உரையுடன் கூடிய அதி அற்புதமான நூல்.

☐ இந்துமத நம்பிக்கைகளும் தத்துவங்களும் (முதல் பாகம்) 27.00

☐ இந்துமத நம்பிக்கைகளும் தத்துவங்களும் (இரண்டாம் பாகம்) 27.00

ஒவ்வொரு இல்லத்திலும் இருக்க வேண்டிய அற்புதமான பொக்கிஷம் இந்நூல். கவிஞர் சக்திதாசன் அவர்கள் அரிதின் முயன்று பல அரிய தகவல்களை மிக எளிமையாகப் புரியும் விதத்தில் நமக்குத் தந்திருக்கிறார்கள். நாம் எப்படியெல் லாம் வாழ வேண்டும், எப்படியெல்லாம் இருக்கக் கூடாது,

நமது புராதனக் கோயில்களின் தத்துவங்கள், இந்துமதத்தின் ஆணி வேரான கொள்கைகள் போன்ற பல்வேறு தகவல் களை உள்ளடக்கிய இந்நூல்கள் நிச்சயம் உங்களிடம் இருக்க வேண்டியது மிக அவசியம்.

- ☐ அர்த்தமுள்ள ஆன்மிகச் சிந்தனைகள் (முதல் பாகம்) - 24.00
- ☐ ஆன்மிக எண்ணங்கள் (இரண்டாம் பாகம்) 24.00
- ☐ தெய்விகச் சிந்தனைகள் (மூன்றாம் பாகம்) 24.00

அர்த்தமுள்ள ஆன்மிகச் சிந்தனைகள் வரிசையில் பல நூல் கள் வெளிவர இருக்கின்றன. அவற்றின் முதல் மூன்று பாகங்கள் இவை. மனம் சஞ்சலமான போதெல்லாம் இந்த நூலை எடுத்துப் படியுங்கள். முதலிலிருந்து என்றில்லை, எந்தப் பக்கத்தை வேண்டுமானாலும் புரட்டிப் படியுங்கள். மன அமைதியும், உத்வேகமும் இந்நூல்களால் உங்களுக் குக் கண்டிப்பாய்க் கிடைக்கும். அம்மன் சத்தியநாதனின் இவ்வரிசை நூல்களால் நீங்கள் நிரம்ப நன்மையைப் பெறப் போகிறீர்கள். மன அமைதிதானே மனிதனுக்கு மிக மிக முக்கியம்.

- ☐ ஸ்ரீ பரமாசார்யாள் பதிலளிக்கிறார் 27.00
- ☐ ஆனந்தமாய் வாழ ஆசார்யாள் வழிமுறைகள் 22.00
- ☐ ஆசார்ய ஸ்வாமிகளின் ஆன்மிக உவமைகள் 27.00

ஸ்ரீ பரமாசார்ய ஸ்வாமிகளின் மேற்கண்ட நூல்களை நீங்கள் வாங்குவதோடு மட்டுமல்லாது, மற்றோருக்கும் படிக்கக் கொடுங்கள். மனத் தெளிவிற்கு மகத்தான நூல்கள் இவை.

- ☐ ஸ்ரீ ராகவேந்திர மகிமை (முதல் பாகம்) 108.00
- ☐ ஸ்ரீ ராகவேந்திர மகிமை (இரண்டாம் பாகம்) 90.00
- ☐ ஸ்ரீ ராகவேந்திர மகிமை (மூன்றாம் பாகம்) 108.00

இந்தக் கலியுகத்தில் ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகள் கல்ப வ்ருக்ஷமாக, காமதேனுவாக அருள்மாரி பொழிந்து வருகிறார். மந்த்ராலய க்ஷேத்ரத்தில் தானே அமைத்துக் கொண்ட பிருந்தாவனத்தில் 1671-இல் ஜீவனோடு பிரவேசமாகி இன்றளவும், தனை நாடித் துதிப்போரை, தனை வேண்டித் துதிப்போரைத் தன் அருளால் அரவணைத்து வருகிறார்.

ஸ்ரீ ராகவேந்திர மகிமையின் முதல் பாகம் பல பதிப்புகள் வெளிவந்து பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்கு ஸ்ரீராகவேந்திரரின் அருள் கிடைக்கச் செய்திருக்கிறது. முதல் பாகத்தைத் தொடர்ந்து இரண்டாவது பாகமும் வெளிவந்து பக்தர்களிடையே பரவசத்தை ஏற்படுத்தி வருகிறது. தற்போது ஸ்ரீ ராகவேந்திர மகிமை மூன்றாம் பாகமும் மிகச் சிறந்த முறையில் வெளிவந்துள்ளது. இந்நூல்கள் ஒவ்வொன்றையும் எழுத ஆசிரியர் அம்மன் சத்தியநாதன் ஆண்டுக் கணக்கில் அவகாசம் எடுத்துக் கொண்டு ஆதாரப்பூர்வமாக எழுதப்பட்டதாகும். இதிலுள்ள அனைத்தும் அற்புதமானவை, ஆணித்தரமானவை. ஒருமுறை படித்துப் பாருங்கள், திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டே இருப்பீர்கள்.

இவை போன்று ஏமது அருள்மிகு அம்மன் பதிப்பகத்தில் பல்வேறு நூல்கள் உள்ளன. பூஜை - விரதம் ஸ்தோத்திரங்கள், சகல சௌபாக்கியமளிக்கும் வழிபாட்டு நூல்கள், திருமணம் - புத்ர பாக்யம், அம்மன் அறுசுவை சமையல் நூல்கள், ஜோதிட நிபுணர் ஹநுமத்தாசனின் ஜோதிடக்கலை நூல்கள், யோகாசார்யா ஜனார்தனின் யோகாசன - உடற்பயிற்சி நூல்கள், தன்னம்பிக்கை, சுயமுன்னேற்றம் - சிறுவர் நூல்கள், நாடகங்கள், அறிவியல் நூல்கள் போன்ற இன்னபிற தலைப்புகளிலும் நிறைய நூல்களை நாங்கள் வெளியிட்டிருக்கிறோம். கடிதம் எழுதுங்கள், முழுமையான விலைப் பட்டியலை அனுப்புகிறோம்.



* * *

சுகமான, சுபிட்சமான நிம்மதியான வாழ்வுக்கு நிரந்தர வழிகாட்டி

# நீதி சாஸ்திரம்

அன்றாட வாழ்க்கையில் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டிய அற்புதமான நெறிமுறைகள்

S. நாகசாமி



